# கல்கி



KALKI
27.10.2002
ரூ. 6.00







## ரஜினி ராஜ்யம்?

அனுபவியுங்கள், ஜீவா
ஓர் ஆயுர்வேதிக் சோப்பு
இதர
சோப்புகளைவிட
27 மடங்கு சிறப்பானது.

27

JEEVA
The Complete Ayurvedic Soap

அனுபவியுங்கள் ஜீவா. உங்கள் சருமத்திற்கு உகந்த சோப்பு. ஜீவாவிலுள்ள 27 அத்தியாவசிய ஆயுர்வேத உட்பொருள்கள் சருமத்திற்கு ஊட்டமளித்து, மெருகூட்டி, பாதுகாக்கிறது. இதன் ஒப்பற்ற நுரை சரும துவாரங்களை திறப்பதோடு மட்டுமின்றி, இதில் நிறைந்த ஆயுர்வேத நற்குணங்கள் சருமத்தில் ஊடுருவிப் பாய்கிறது. எனவே உங்கள் சருமத்தில் இளமை, மென்மை மற்றும் பொலிவு பூத்துக் குலுங்குகிறது. மேலும் சருமத்திற்கு தருவதோ புத்துயிர்.

சருமம் புத்துயிர் பெறும்

From the house of Jyothy Laboratories Ltd. Shivshakti Estate, Marol, Andheri (E), Mumbai - 59.

Situations/JLL-JEEVA/22/2002 TAM

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
புதிய ஈ மெயில் முகவரிகள் :
எடிடோரியல் : kalki@kalkiweekly.com
சந்தா : subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் : info@kalkiweekly.com



• சோனாலி

# கெட்டிமேள சப்தம்...

கெட்டிமேள சீஸன் போலிருக்கிறது பாலிவுட்டில். சமீபத்தில்தான் அபிஷேக் பச்சன் – கரிஷ்மா கபூர் திருமண நிச்சயம் அறிவிக்கப்பட்டது.

இப்போது தங்க மகளுக்கும் தங்க மகனுக்கும் டும்டும்டும் தீர்மானித்திருக்கிறார்களாம். அதுவும் அமிதாபின் அறுபதாவது பிறந்தநாள் விழாவின் போது.

சோனாலி பிந்த்ரேவும் டைரக்டர் கோல்டி பெல்லும் நீண்ட நாள் காதலர்கள். ('சோனா'ன்னா இந்தியில தங்கமாம்!) 'க்யா மஸ்தி க்யா தூம்'ல் சோனாலி அரங்கேற்றிய நடனத்திற்கு முன்புவரை, ஏறக்குறைய அவரை மறந்தே போகிற அளவுக்கு மார்க்கெட் டல். கோல்டிக்கும் அப்படித்தான். முதல் படமான "பஸ் இத்னா சா க்வாப் ஹை' அத்தனை வரவேற்பு பெறவில்லை.

இருவர் பெயரிலும் தங்கம் இருக்கிறது. இந்த இணைப்பாவது இருவருக்கும் தங்கமான நாட்களைக் கொண்டு வரட்டும்.

– நாதன்





• சந்திரசேகர்

# இந்த ஆட்டத்தில் வெற்றி!

சென்னை கால்ஃப் கிளப் முக்கியஸ்தர்கள் அந்த வி.ஐ.பியை எதிர்பார்த்துக் காத்திருக்க கடந்த வியாழனன்று இரண்டே கால்மணிக்கு அவர் வந்து இறங்கியபோது, பூர்ண கும்பம் கொடுத்து வரவேற்காததுதான் பாக்கி. கூடியிருந்த அனைவருக்கும் ஒரே திரில். வி.ஐ.பியுடன் கை குலுக்கல், ஆட்டோகிராப் என்று அடுத்த கால் மணி நேரம் போனது. வந்தவர், விவியன் ரிச்சர்ட்ஸ்!

கிரிக்கெட்டிலிருந்து ஓய்வு பெற்ற பின், கால்ஃப் ஆட ஆரம்பித்த ரிச்சர்ட்ஸ், இப்போது, வாரத்துக்கு மூன்று நாட்கள் கண்டிப்பாக கால்ஃப் ஆடி வருகிறார். சென்னை வந்து இறங்கிய மே.இ.கிரிக்கெட் அணி, ஏர்போர்ட்டிலிருந்து, ஓட்டலுக்கு பஸ்ஸில் சென்றபோது, டீம் மேனஜர் ரிச்சர்ட்ஸ், ஒய்.எம்.சி.ஏ பகுதியில் இருந்த கால்ஃப் கிளப் மைதான பலகையைப் பார்த்துவிட, உடனே, தாம் கால்ஃப் ஆட ஆசைப்படுவதாகத் தெரிவித்திருக்கிறார்.

கிரிக்கெட் சங்கத் தலைவர் சீனிவாசன்தான், கால்ஃப் கிளப்புக்கும் தலைவர். உடனே ரிச்சர்ட்ஸ் கால்ஃப் ஆட ஏற்பாடு செய்யப்பட்டுவிட்டது.

"கால்ஃப் ஆட வரும்போது, ரிச்சர்ட்ஸ் தம்முடன் ரிக்கி என்ற மே.இந்திய நண்பரையும் அழைத்து வந்திருந்தார். சென்னை கால்ஃப் கிளப்பின் சந்திரசேகருடன் அணி சேர்ந்து கொண்டார். நானும், ரிக்கியும் இன்னொரு அணி! நாலு பேருமாய் இரண்டரை மணிக்கு ஆரம்பித்து, மாலை ஆறேகால் மணி வரை ஜாலியாக விளையாடினோம்'' என்கிறார் சென்னை கால்ஃப் கிளப் நிர்வாகக் கமிட்டியைச் சேர்ந்த சங்கரகிருஷ்ணன்.

''சென்னையில் உள்ள கால்ஃப் மைதானம், மரங்கள் நிறைந்த சவாலான ஒன்று. இங்கே ஆடுவது கஷ்டம். ஆனாலும் வெகு நேர்த்தியாக ஆடினார் ரிச்சர்ட்ஸ்! முதல் தடவை பார்க்கிறோம் என்பது போல இல்லாமல், ஏதோ பத்து, பன்னிரண்டு வருஷம் பழகின நண்பர் போல, ஜாலியாக, ஜோக் அடித்துக்கொண்டு, கேஷுவலாக அவர் ஆடியது எங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது!

"கிரிக்கெட்டிலிருந்து ஓய்வு பெற்ற பின்பும், என் உடல் இத்தனை முறுக்குடன் இருக்கிறதென்றால் அதற்கு கால்ஃப் ஆடுவதுதான் காரணம்'' என்று சொன்னார் ரிச்சர்ட்ஸ்!

சரி! ஆட்டத்தில் ஜெயித்தது யார்? ரிச்சர்ட்ஸ் அணிதான்!

- எஸ். மௌலி

படங்கள்: யோகா

செய்தித் தாளைப் பிரித்தால், நாளொரு கம்பெனி திவால், பொழுதொரு நிறுவனம் ஆட்டம் காண்கிறது என்று பகீர் தகவல்கள்.

'என்ரான்' என்றொரு நம்பிக்கை நட்சத்திர நிறுவனம், தடாலடியாக மண்ணைக் கவ்வியதற்குக் காரணமே, ஆடிட்டர்களின் சரியான வழிகாட்டல் இல்லாததுதான் என்று பேசப்படுகிறது. சமீபத்தில் கூட 'டாடா ஃபைனான்ஸ்' தொடர்பான சில கசப்பான செய்திகள் வெளியாயின. அங்கும் ஆடிட்டர்களின் பணி விமர்சனத்துக்கு உள்ளாயிற்று.



கணக்கு வைக்கும் முறைகளால் ஒரு நிறுவனம் லாபகரமாக நடப்பது போன்ற, ஒரு தவறான தோற்றம் உருவாவதற்கு வாய்ப்புண்டு. இதையெல்லாம் சுட்டிக்காட்டி எச்சரிப்பது ஆடிட்டர்களின் கடமை.

இந்தக் கடமையைச் செவ்வனே செய்தவர் சூரி. அவருக்கு இன்று நூற்றாண்டு. அவர் நிறுவிய சூரி அண்டு கம்பெனிதான் ஆதி நாள் முதல் இன்றளவும், ஒரு வைர விழா காலமாக - கல்கி நிறுவனத்துக்கு ஆடிட்டர்களாக சிறப்பாக வழிகாட்டி வருகிறார்கள். கல்கியில் வரும் தலையங்கங்கள் அச்சமின்றி எழுதப்படுவதாகப் பலர் குறிப்பிடுவதுண்டு. அதற்கு முக்கியக் காரணம், பொருளாதார ரீதியில் நாங்கள் தவறேதும் செய்யாதிருப்பதும், தவறு செய்யவிடாமல் சூரி நிறுவனம் எங்களைக் காப்பதும்தான்.

# வழிகாட்டும் சூரி

ஒரு முறை சூரி, கல்கி அலுவலகத்துக்கு வந்திருந்தபோது, பெரியவர் சதாசிவம், என்னை ஃபோனில் அழைத்து, "சூரி, உன்னைப் பார்க்கணும்கிறார்" என்றார். 'சரி– ஏதோ அநாவசிய செலவு செய்து விட்டோம் போலிருக்கு. பிடித்து உலுக்கப் போகிறார்' என்று நினைத்துக் கொண்டே சதாசிவம் அறைக்குச் சென்றேன். "சொல்லு" என்றார் சதாசிவம், சூரியைப் பார்த்து.

சூரி என்னிடம் ஒரு கத்தைக் காகிதத்தை நீட்டி, "இதுலே ஒரு சிறுகதை இருக்கு. இது பற்றி உன் அபிப்பிராயம் தெரியணும்" என்றார். 'அப்பாடா! இந்த மட்டுமாவது விட்டாரே!' என்று பெருமூச்சு விட்டவாரே, என் அறைக்குத் திரும்பி, அந்தக் கதையைப் படித்தேன். அற்புதமாக இருந்தது. கடைசியில் 'சிவசங்கரி' என்று எழுதியவர் பெயர், முகவரி தரப்பட்டிருந்தது.

எனக்கு ஆச்சர்யம் தாங்கவில்லை. முதல் ஆச்சரியம், இந்த இளம் வயதில் சிவசங்கரி, இத்தனை ஆழமான, அற்புதமான சிறுகதை எழுதியிருக்கிறாரே என்பது. அதுதான் அவருடைய முதல் சிறுகதையும்கூட!

அதைவிட ஆச்சரியம் சூரி நடந்து கொண்ட விதம். 'இதிலே ஒரு சிறுகதை இருக்கு. இதுபற்றி உன் அபிப்பிராயம் தெரியணும்' என்றுதான் சொன்னாரே தவிர, 'என் மகள் எழுதிய கதை. கல்கியில் வந்தால் நன்றாக இருக்கும்' என்று கூடக் கூறவில்லை. அப்படிச் சொல்வதற்கு அவருக்கு என்னிடம் செல்வாக்கு உண்டு. ஆனால் தமது எல்லைகளை உணர்ந்தே நடந்து கொண்டார்.

தட்டிக் கேட்க வேண்டிய இடத்தில் தட்டிக் கேட்பார். தழைந்து போக வேண்டிய சந்தர்ப்பத்தில் தழைவார். இதுதான் சூரியின் உன்னதமான பண்பாடு.

அவர் ஈடுபட்டிருந்த பொது நலப்பணிகள் ஏராளம். நேர்மை + சமுதாய நோக்கு = சூரி என்று சொல்லலாம். அந்தமுறையில் இன்றைக்கும் அவர் நமக்கு வழிகாட்டி.

— கி. ராஜேந்திரன்

**த**மிழ்த் திரையுலகினரின் நெய்வேலிப் பேரணியில் நிறைய கார்கள் அணி வகுத்து வந்தன. ஆனால் புத்தம் புதிதாக பளபளவென்று மின்னியபடி மெல்ல நகர்ந்து கொண்டிருந்த நியூகுவாலிஸ் காரைச் சுற்றி இருபது அதிரடிப்படை போலீசார், கையில் எந்திரத் துப்பாக்கி, முகத்தில் டென்ஷன் சகிதம் காவல் காத்தபடி வந்தனர். காருக்குள் யாரென்று கண்களை ஊடுருவ விட்டால், அங்கே கால்மேல் கால் போட்டபடி சிநேகா! மும்தாஜ் வந்த பேருந்துக்கும் இதே லெவல் பாதுகாப்பு! பேரணியில் கலந்து கொண்ட பல நடிகைகள், ஒருநாள் முதல்வர் மாதிரியே பந்தா பண்ணியதைக் கண்ட நடிகர்களின் காது வழியே புகை வராதது மட்டும்தான் பாக்கி!

• 'பகவதி' - விஜய், ரீமாசென்

**ஏ**வி.எம் படப்பிடிப்பு வளாகத்துக்குள் நுழைந்தால் ஒரு புதிய நினைவுச் சின்னம் கண்களில் படுகிறது. ஏவி.எம் நிறுவனம் தயாரித்து 1952ல் வெளிவந்த 'பராசக்தி' படம் வெளிவந்து ஐம்பது ஆண்டுகள் நிறைவடைந்துவிட்டதைக் குறிக்கும் விதமாக, பித்தளைத் தகட்டில் விவரங்களைப் பொறித்திருக்கிறார்கள். அதில் ஒரு விசேஷத் தகவலும் இடம் பெற்

# அதிரடி பாதுகாப்பில் சி

றிருக்கிறது. 'பராசக்தி' படத்திற்கு முதன்முதலாக 'சக்ஸஸ்' என்று நடிகர்திலகம் சிவாஜி கணேசன் பேசி, கேமரா முன் நடித்த இடம் இது' என்று பொறித்திருக்கிறார்கள். நினைவுச் சின்னத்தை கமல் திறந்து வைத்திருக்கிறார். பொருத்தமான கை!

'**கா**லாட் படை' ஒலிப்பேழை வெளியீட்டு விழாவில் ஓர் ஆச்சரியம்! விற்பனையாகும் ஒவ்வொரு கேசட்டிலிருந்தும் ஒரு ரூபாயை, 'உதவும் கரங்கள்' அமைப்பிற்குத்

• 'ஏப்ரல் மாதத்தில்' சிநேகா

படத்தில் வரும் பாத்திரத்திற்காக மொட்டை அடித்துக்கொண்ட நடிகர்களைப் பார்த்திருப்பீர்கள். படத்தில் இடம் பெறும் ஒரு பாடல் காட்சிக்காக மட்டும் தலைமுடியை வெட்டிக் கொண்ட நடிகரை பார்த்திருக்கிறீர்களா? அப்படியொரு புரட்சியை (?) செய்திருக்கிறார் விஜய். பகவதி படத்திற்காக...

லண்டனிலிருந்து எம்.பி.ஏ படிப்பை பாதியில் விட்டு விட்டுத் தமிழில் நடிக்க வந்த என்.ஆர்.ஐ ஆகாஷ், இப்போது எங்கே என்று வலை போட்டுத் தேடியதில், தெலுங்கு கரையோரம் அகப்பட்டார். அங்கே இப்போது பிஸி ஹீரோ. தமிழ்நாட்டிலும் எனக்கு ரசிகர் மன்றம் வைக்கும்வரை ஓய மாட்டேன் என்ற முடிவோடு, 'இனிது இனிது காதல் இனிது' படம் மூலம் மீண்டும் தமிழில் நடிக்கிறார். இயக்குனர் ஷக்தி சிதம்பரம். அப்போ கட்டாயம் படத்தில் காமெடி இருக்கும்!

# நகா!

• ரவுண்ட்ஸ் பாய்

தருவதாக அறிவித்தார் தயாரிப்பாளர் சோழா பொன்னுரங்கம். பேச்சோடு நிறுத்தி விடாமல், 'உதவும் கரங்கள்' வித்யாகருக்கு முதல் கட்ட காசோலையை மேடையிலேயே கொடுத்து அசத்தி விட்டார்.



• 'இனிது இனிது காதல் இனிது' - ஆகாஷ், நேகா.



* புசான் விளையாட்டுப் போட்டித் துவக்க விழாவில்

ஆசிய விளையாட்டுப் போட்டிகள் குறித்து கொஞ்சம் பெருமைப் படலாம். அதுவும் இதே தென் கொரியாவில், 1986ல் நடைபெற்ற ஆசிய விளையாட்டில், தடகள வீரர்கள் கொண்டு வந்தது வெறும் ஐந்து தங்கப்பதக்கங்களைத்தான். அவற்றில் நான்கு, பி.டி. உஷாவின் அற்புதத் திறமையால் கிடைத்தவை. அதற்கெதற்கு நானூறு தடகள வீரர்கள் இங்கிருந்து செல்ல வேண்டும் என்ற கேள்வி, சாதாரண விளையாட்டு ரசிகனிலிருந்து அன்றைய பிரதமர் ராஜீவ் காந்தி வரை பட்டு எதிரொலித்தது.

சில மாதங்களுக்கு முன் நடைபெற்ற காமன்வெல்த் பந்தயங்களில்

# சுனிதாவின்

முப்பத்திரண்டு தங்கப்பதக்கங்களை இந்தியர்கள் குவித்தது உண்மை. ஆனால் அதில் சீனாவும் தென்கொரியாவும் பங்கேற்கவில்லையே!

சமீப ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் ஆறு தங்கங்களை வென்று வந்திருக்கிறார்கள் இந்தியர்கள் - தடகளப் பிரிவில் மட்டும்.

விளையாட்டு வீரர்கள் ஊக்கமருந்து பயன்படுத்துவது பற்றி டாக்டர் பார்த்தசாரதியிடம் கேட்டோம்.

''விளையாட்டு வீரர்கள், இயற்கையான உடல் நலத்துடன், பயிற்சிகள் மூலமாக, தங்கள் திறமையை வளர்த்துக் கொண்டு, சாதனைகள் புரிய வேண்டும் என்ற எதிர்பார்ப்புடன்தான், இன்டர்நேஷனல் அளவில் விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்படுகின்றன. நாடுகளிடையே நட்பும், சகோதர உணர்வும் ஏற்பட வேண்டும் என்பதே இவ்விளையாட்டுப் போட்டிகளின் நோக்கம். ஆனால், உடல் ஊக்கி மருந்துகளை உட்கொண்டு, செயற்கையாகத் திறமை பெற்று, போட்டிகளில் ஜெயிப்பது இப்போது அதிகரித்து விட்டது. இது தவறு; இத்தகைய வெற்றியை ஏற்பது தவறு என்றுதான், வெற்றி பெறும் விளையாட்டு வீரர்கள் 'டோப் டெஸ்ட்' என்கிற பரிசோதனைக்குட்படுத்தப்படுகிறார்கள்.

'டோப் டெஸ்ட்' என்றால்?

"ஒரு விளையாட்டு வீரர், விதிமுறைகளுக்கு மாறாக உடல் ஊக்கி (ஸ்டீராய்டு) களை உட்கொண்டு, செயற்கையாகத் திறமையை அதிகரித்துக் கொண்டிருக்கிறாரா என்று சோதிப்பதுதான் டோப் டெஸ்ட். வெற்றி பெற்ற வீரரின் சிறு

* பார்த்தசாரதி



தவிர ஸ்னூக்கர், கபடி என்றும் தங்கங்கள் மின்னுகின்றன. பாகிஸ்தான் அணியை இந்திய ஹாக்கி அணி வென்ற




* சுனிதா ராணி

# சறுக்கல்!

தும் ஒரு சிறப்புதான்.

மொத்தத்தில் ஏழாவது இடம்தான் என்றாலும் இது பெருமை படத்தக்க சாதனை தான். (போனமுறை ஒன்பதாவது இடம்)

பகதூர் சிங், பீனா மோல், பீனு, அஞ்சு ஜார்ஜ், நீலம் சிங் ஆகிய பலரது சிறப்பான பங்களிப்பு இந்தியாவைப் பெருமைப்பட வைத்திருக்கிறது என்றாலும், விழுந்து விட்ட கரும்புள்ளி எளிதில் மறைந்து விடாது. சுனிதா ராணியைத்தான் சொல்கிறோம்.

1500 மீட்டர் ஓட்டப்பந்தயத்தில் தங்கம் என்றால் சும்மாவா? அதுவும் ஆசிய விளையாட்டுகளில் இந்த தூரத்தை நான்கு நிமிடம் - 6.03 நொடிகளில் கடந்ததென்பதே ஒரு புதிய சாதனைதான். ஐயாயிரம் மீட்டர் ஓட்டப் பந்தயத்திலும் வெண்கலத்தை வென்று காட்டினார். ஆனால் இப்போது அவர் மீது நிழல் படிந்திருக்கிறது. போதைப் பொருளைப் பயன்படுத்தியதாக அவர்மீது குற்றச்சாட்டு.

"இந்தியாவிலும் தடகள வீரர்கள் மற்றும் வீராங்கனைகளுக்கிடையே ஸ்டீராய்டை பயன்படுத்தி தாற்காலிகமாக அதிக சக்தி பெறும் பழக்கம் அதிகரித்து வருகிறது. இதை முளையிலேயே கிள்ளுவது நல்லது" என்று பி.டி. உஷா சில வருடங்களுக்கு முன்பே எச்சரிக்கை விடுத்தார். சுனிதா ராணிக்கும் தெரிந்திருக்கும்.

சக விளையாட்டு வீரர்களில் பலரும் சுனிதாவுக்காக வருத்தப்பட்டிருக்கிறார்கள். ஆனால் போதை மருந்தைப் பயன்படுத்தி சுனிதா வென்றிருந்தால் அவரது செயல்தான் பெரிதும் வருந்தத்தக்கது.

— ஜி.எஸ்.எஸ்

# வெறியால் விளையும் அவலம்!

நீரைப் பரிசோதித்தால், இதைக் கண்டு பிடித்துவிடலாம். ரத்தப் பரிசோதனை மூலமும் இதனைக் கண்டுபிடிக்க முடியும்.

**"ஜெயித்தாலும், டோப் டெஸ்ட்டில் ஸ்டீராய்டு பயன்படுத்தியது தெரிந்துவிடும் என்பது தெரிந்தும், விளையாட்டு வீரர்கள் ஏன் அவற்றைப் பயன்படுத்துகிறார்கள்?"**

"ஜெயிக்க வேண்டும் என்ற வெறியும், அறியாமையும்தான் காரணம். பயிற்சியின் போது ஸ்டீராய்டுகளை உட்கொள்ளுவதால் திறமையும், பலமும் கூடுதலாகக் கிடைத்து, வேகமாகச் செயல்பட முடிகிறது. பந்தயத்துக்கு ஏழெட்டு மாதங்களுக்கு முன், ஸ்டீராய்டை நிறுத்திவிட்டால் டோப் டெஸ்ட்டில் அது தெரியாது. செயற்கையாக அதிகரித்த திறமை குறைந்துவிடும். எனவே தொடர்ந்து சாப்பிட்டு, போட்டியில் ஜெயித்து, கடைசியில் பரிசோதனையில் மாட்டிக் கொள்கிறார்கள்.

**"ஸ்டீராய்டு இல்லாமல், திறமையை அதிகரித்துக் கொள்ளும் சாத்தியமே இல்லையா?"**

"ஸ்டீராய்டு என்பது ஒரு மேற்கத்திய கலாசாரம். அதை நம்மவர்களும் காப்பியடித்துக் கொண்டு இருக்கிறார்கள். நம் ஆயுர்வேதத்தில், ஸ்டீராயிடின் தன்மைகள் இல்லாத, இயற்கையிலேயே வலிமையையும், திறமையையும் அதிகரிக்கும், பக்க விளைவுகள் ஏதுமில்லாத ஆரோக்கியமான ஊட்டமளிக்கும் மருந்துகள் நிறைய உள்ளன. அவற்றை நாம் பயன்படுத்தி தங்கம் வெல்ல முடியும்.

- பாரதி

ரஜினியின் உண்ணாவிரதமும், அதற்கு வந்த கூட்டமும், சில அரசியல் கட்சிகளுக்குப் பதற்றத்தைக் கூட்டியிருக்கின்றன. இன்னமும் சில கட்சிகளோ 'அவர் விரைவில் அரசியலில் குதித்து நம்மை ஆதரித்தால் அரசியல் குறியீட்டை உடனே அடைந்து விடலாமே' என்று ஏங்கத் துவங்கியிருக்கின்றன. பா.ம.கவோ, "நடிகர்கள் அரசியல் பக்கமே தலைகாட்டக்கூடாது" என்று ஆர்ப்பாட்டம் செய்கிறது. "காவிரி விவகாரத்தில் அரசியலை நுழைத்து என்னைக் கவிழ்க்க நினைத்தவர்களைத் தேர்தலில் சந்திப்பேன்'' என்று ரஜினி சொன்னதை, அவர் அரசியலுக்குள் நுழைந்து விடுவதற்கு அச்சாரமாகச் சொல்கிறார்கள். "அப்படி நுழைந்தால் அது தனிக் கட்சியாக இருக்குமா? அல்லது ஏதாவது ஒரு கட்சியை, கூட்டணியை ஆதரிப்பாரா'' என்றெல்லாம் கேள்விகள் எழுகின்றன. இப்போது அரசியல் உலகில் பரவலாக அடிபடும் பேச்சு "தமிழக அரசியல் தலைவர்களிலேயே ரஜினி மிகவும் மதித்துப் போற்றுவது ப.சிதம்பரத்தைத்தான்" என்பது. சிதம்பரத்தை முன் நிறுத்திதான் ரஜினி அரசியல் செய்வார் என்பது பரவலாகவே உருவாகிவிட்ட செய்தி. "எந்தவித ஊழல் குற்றச்சாட்டுக்கும் ஆளாகாமல், பளிச்சிடும் நிர்வாக அனுபவத்தைப் ப.சி. பெற்றிருப்பதால் தான் ரஜினிக்கு அவர் மீது ஈடுபாடு" என்கிறார்கள். மாறி வரும் அரசியல் காட்சியைப் பற்றி ப.சிதம்பரத்திடம் பேசினோம்.



# ரஜினி ராஜ்யம்?

"மூன்றாவது அணிக்குத் தலைமை தாங்க ஒருவர் வருவார் என்று முன்பு சொன்னீர்கள்! பிறகு சமீபத்தில் ஒரு பேட்டியில், வருவது, வராதது ரஜினியின் விருப்பம் என்று சொல்லியுள்ளீர்கள். இந்த நிலையில் "தேர்தலில் சந்திப்பேன்" என்று ரஜினி

சொன்னதை எந்த வகையில் எடுத்துக் கொள்ளலாம்!"

**ப. சிதம்பரம் :** தேர்தலில் சந்திக்கிறேன் என்று சொல்லியிருக்கிறார்; வாஸ்தவம்தான். ஆனால் எந்தத் தேர்தல் என்று சொல்லவில்லை. அது பாராளுமன்றத் தேர்தலா, சட்டமன்றத் தேர்தலா என்று தெரியவில்லை. ஏனென்றால் தமிழகத்தைப் பொறுத்தவரை, பாராளுமன்றத் தேர்தலிலும், சட்டமன்றத் தேர்தலிலும் வாக்காளர் கண்ணோட்டம் வித்தியாசப்படும். எனவே ரஜினி இன்னமும் சற்று தெளிவு படுத்த வேண்டியிருக்கிறது.

"ரஜினி உண்ணாவிரதத்திற்கு ஆளும் கட்சி தவிர எல்லா கட்சித் தலைவர்களும் சென்று தார்மிக ரீதியாக ஆதரவு தெரிவித்ததென்பது அவரைத் தங்கள் பக்கம் இழுக்கச் செய்த முயற்சியாக கருதலாமா?







**ப.சி. :** இந்த விஷயத்தை நீங்கள் அப்படிப் பார்க்கக் கூடாது. காவிரிப் பிரச்னை என்பது பொதுப்பிரச்னை. உண்ணாவிரதம் என்பது எதிர்ப்பைத் தெரிவிக்க, கோரிக்கைகளை வலியுறுத்த, மகாத்மா காந்தியால் கடைபிடிக்கப்பட்ட ஒரு வழிமுறை. இந்த வகையில் எல்லாத் தலைவர்களும் அவரை வாழ்த்தியது என்பது சரியே... அதே சமயம் வேறு எந்தக் கட்சித் தலைவரோ இதே பிரச்னைக்காக உண்ணாவிரதம் இருந்திருப்பாரேயானால், நிச்சயம் ரஜினியைப் பாராட்டியதைப் போன்று அவரையும் பாராட்டியிருப்பார்கள்.

"நடிகர்கள்-குறிப்பாக ரஜினி-அரசியலுக்கு வருவதை பா.ம.க. மற்றும் சில சிறு இயக்கங்கள் எதிர்க்கின்றனவே!

**ப.சி. :** ரஜினியை வம்புக்கிழுப்பதை ஒரு யுக்தியாக



டாக்டர் ராமதாஸ் கையாள்கிறாரோ என்று எனக்குச் சந்தேகம் இருக்கிறது. ஆனால் அவரது கருத்துக்களை ஏற்றுக் கொள்வதும், நிராகரிப்பதும் பொது மக்கள் கையில்தான் இருக்கிறது. வழக்கறிஞர், டாக்டர் என்பது போல நடிப்பும் ஒரு தொழில்தான். அந்தத் தொழில் செய்பவர்களுக்குச் சமூகப் பிரக்ஞையோ, அரசியல் உணர்வோ இருக்கக் கூடாதா என்ன?

"ரஜினியை சந்தித்துப் பேசும் வாய்ப்பு உங்களுக்குப் பல முறை கிடைத்திருக்கும். அவரது 'பார்வை' எப்படியிருக்கிறது?

**ப.சி. :** 1996ல் இரண்டு, மூன்று முறை சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. அதன்பின் ஓர் இடைவெளிக்குப் பிறகு பல முறை சந்தித்துப் பேசும் வாய்ப்பு கிடைத்தது. அவர் ஒரு தேசியவாதி. நாட்டுப்பற்று பளிச்சிடும் அவர் பேச்சில். பொது வாழ்வில் ஊழல் இருக்கக் கூடாது என்பதில் உறுதியாக இருக்கிறார். மக்களுக்கு எந்த கஷ்டங்களும் இருக்கக் கூடாது என்பது அவர் விருப்பமாக இருக்கிறது. சமூகத்துக்கு ஏதாவது செய்ய வேண்டுமென்ற உந்துதல் இருக்கிறது. ஆனால் இதையெல்லாம் செய்ய அவர் எந்த வழியைக் கையாளுவார் என்பது அவரே முடிவு செய்ய வேண்டிய விஷயம்.

''ரஜினி வந்துதான் தமிழகத்திற்கு விடிவுகாலம் பிறக்க வேண்டுமா? அப்படியென்றால் இப்போதுள்ள கட்சிகள் மக்களின் நம்பிக்கையை இழந்து விட்டனவா?

**ப.சி. :** ரஜினி அரசியலுக்கு வர வேண்டும் என்று பொதுமக்களும், அவரது ரசிகர்களும் விரும்புகிறார்கள் என்பது வெளிப்படை. அந்த உணர்வைப் புரிந்து கொண்டு அரசியலுக்கு வரலாமா, வேண்டாமா என்று முடிவெடுக்க வேண்டியது அவர்தான். இதில் மற்ற கட்சிகளைப் பற்றிய பிரச்னையே எழவில்லையே!

"ரஜினி ஆதரவில் காங்கிரஸ் மூன்றாவது அணியை அமைத்தால் திராவிட இயக்கங்களுக்கு மாற்றுச் சக்தியாக இருக்கும் என்று நீங்கள் கருத்து தெரிவித்திருக்கிறீர்கள். இதற்கான முயற்சிகளை ஏன் நீங்கள் வேகப்படுத்தக் கூடாது?"

**ப.சி. :** இதைச் செய்ய வேண்டியது காங்கிரஸ்தான். மூன்றாவது அணிக்குத் தலைமை தாங்கத் தயார் என்று காங்கிரஸ் அறிவித்தாலே காட்சிகள் மாறத் துவங்கும். தயக்கத்திற்கான காரணம் புரியவில்லை.

"காங்கிரஸ் தலைமை அதை ஏன் அறிவிக்க தயக்கம் காட்டுகிறது?"

**ப.சி:** இது பற்றி நான் சொல்ல முடியாது. ஆனால் சில தமிழக காங்கிரஸ் பிரமுகர்களுக்கே இன்னமும் அ.தி.மு.கவுடன் கூட்டு அமைக்க வேண்டும் என்ற விருப்பம் இருக்கிறதே!

"அப்படி காங்கிரஸ் தலைமையில் ஒரு மூன்றாவது அணி அமைக்கப்படும் பட்சத்தில், அதில் எந்தெந்த கட்சிகள் இணையும்?"

**ப.சி. :** காங்கிரஸ், காங்கிரஸ் ஜனநாயகப் பேரவை சி.பி.ஐ., சி.பி.எம். சிறுபான்மையோர் இயக்கங்கள், தலித் அமைப்புகள் ஆகியவை அது போன்ற மூன்றாவது அணியில் இணையக் கூடும்.

''ரஜினியின் ஆன்மிகப்பாதையால் கவரப்படும் பா.ஜ.க. அவரை வளைத்துப் போடும் ஆபத்து உள்ளதா?"

**ப.சி. :** தொண்ணூறு சதவீதத்திற்கு மேல் கடவுள் நம்பிக்கை கொண்டவர்கள் உள்ள இந்த நாட்டில் எல்லோரும் பா.ஜ.க. ஆதரவாளர்களா என்ன? அப்படியென்றால் பா.ஜ.க. பல வருடங்களுக்கு முன்னரே தனித்து ஆட்சி அமைத்திருக்குமே! அந்தக் கட்சியால் 21 சதவீதத்துக்குமேல் இதுவரை வாக்குகள் வாங்க முடியவில்லையே!

— ப்ரியன்

அட்டைப் படங்கள் : சௌரா

படங்கள் : ராஜன்

---

**"நேற்றுதானே உன்னை ரேஷன் கடையில வேலைக்குச் சேர்த்துவிட்டேன். அதுக்குள்ள ஏன் அந்த வேலையை விட்டே?"**

**"நான் விடலே சார். சரியான அளவு எடை போட்டுக் கொடுத்தேன்னு என்னை வேலையை விட்டு நிறுத்திட்டாங்க!"**

**- சீர்காழி வி.ரேவதி**



அன்னமே பிரம்மா! அன்னமே விஷ்ணு! அன்னமே சிவன்!



# புண்ணியக்ஷேத்ரம் இராமேஸ்வரத்தில் தீபாவளி அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ராமஸேது என்றும், ஸேது ஸ்தலம் என்றும் போற்றப்படும் இராமேஸ்வரம் புகழ்மிக்க புண்ணிய க்ஷேத்ரமாகும். இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத புண்ணியப் பலன் கிடைக்கும்.

இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அனைவரும் நலம் பெறுவர். இராமேஸ்வரத்தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். அன்னமளிப்பது அமிர்தமளிப்பதற்கு சமம். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறியதொகை மற்றும் அரிசி போன்ற உணவு பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் அல்லது பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும். ரூ. 5,000 அளிக்கும் அன்பர்களுக்கு **கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோமணி ஸ்ரீமான் திருவெண்காடு டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகளால்** தயாரிக்கப்பட்டு பூஜையில் வைத்த யந்திரம் அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப எந்த யந்திரம் தேவையோ அந்த யந்திரம் இலவசமாக வழங்கப்படும். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு அணில் செய்த ஸேவை போல் இந்த லோக க்ஷேமத்திற்கு நம்மால் இயன்றளவில் உபகாரம் செய்திடுவோம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*


## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

**GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST**

M-11/F-4, TNHB FLATS, I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA

☎: 4900303, 4900603 Fax: (044)4916316 E-mail: gopuradarisanam@yahoo.com


★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

ஹலோ, மிஸ்டர் புஷ்!
பாகிஸ்தான்ல
ஜனநாயகம்
திரும்பணும்னு
ஆசைப் பட்டீங்களே....
தேர்தல் நடத்திக்
காட்டிட்டார்
பாருங்க....!

தலிபான்
ஆதரவாளர்கள்
வெற்றி



**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

# பயங்கரவாதத்துக்குப் பச்சைக் கொடி!

"ஹிந்து மதத்தைத் தவிர வேறு மதத்திற்கு நம் நாட்டில் மதிப்புத் தரலாகாது!" என்று ஆரம்பித்து சிவசேனா தலைவர், அடிப் படைவாத அனல் வார்த்தைகளை அள்ளி வீசியிருக்கிறார். அவருடைய ஆத்திரம், முஸ்லிம் சகோதரர்களை நேரடியாகத் தாக்கிப் பேசும் அநாகரிக எல்லையைத் தொட்டிருக்கிறது.

முஸ்லிம்கள் இன்று இந்தியாவின் உயிரோட்டத்தில் கலந்து போயிருக்கிறார்கள். எல்லாத் துறைகளிலும் பொறுப்பு வகித்து முத்திரை பதித்து வருகிறார்கள். அப்துல் கலாம் போன்றோரின் பெயரை உச்சரித்தாலே, ஹிந்து – முஸ்லிம் என்ற வேறுபாடின்றி பலர் எழுந்து மரியாதை செலுத்துவார்கள். இவ்வாறிருக்க, தாக்கரே போல் முஸ்லிம்களைப் பிரித்துப் பார்ப்பதும் பேசுவதும் அச் சமூகத்தினருக்குச் செய்யப்படும் அநீதி என்பதுடன் ஹிந்து தர்மத்துக்கே இழைக்கப்படும் கேடு.



2002 அக்டோபர் 27
சித்ரபானு ஐப்பசி 10
மலர் : 61
இதழ் : 13




இஸ்லாமிய பயங்கரவாதம் என்பது காஷ்மீரில் மட்டுமின்றி, இன்று உலகம் முழுவதுமே பெரிய பிரச்னைதான். அதை முஸ்லிம்கள் உள்பட யாரும் மறுக்கவில்லை. ஆனால், இப்பிரச்னையை எதிர்கொள்ள, பின் லேடனின் தற்கொலைப் படைகளைப் போல் இங்கு ஹிந்து தற்கொலைப் படைகள் உருவாக வேண்டும் என்று தாக்கரே பேசியிருப்பது மிகவும் அபாயகரமானது. ஏற்கெனவே கொந்தளித்துக் கொண்டிருக்கும் உணர்ச்சிகளைச் சகட்டு மேனிக்குத் தூண்டிவிட்டு, எண்ணற்ற துயரச் சம்பவங்களுக்கு இது வழி வகுக்கும். அக்ஷர்தாம் அதிர்ச்சியிலிருந்தும் கோத்ரா, அதன் பின்விளைவுகளிலிருந்தும் நாம் இன்னும் மீண்டபாடில்லை. தாக்கரே பேசிய அதே தினத்தில், கோத்ராவிலும் ஆமதாபாத்திலும் மீண்டும் குண்டுகள் வெடித்துள்ளன.

இந்தியாவில் இருக்கும் முஸ்லிம்களை தாக்கரே போன்ற தலைவர்கள் தாக்கிக் கொண்டே இருப்பார்களானால், கோத்ரா போன்ற கோரங்கள் அதிகரிக்கும்; முஸ்லிம்கள் பலப்பலர் இங்கிருந்தபடியே பாகிஸ்தான் ஆதரவாளர்களாகவும் உளவாளிகளாகவும் மாறத் தொடங்குவார்கள். அண்டை நாட்டுடன் நமது உறவு பலப்படுவதற்குப் பதில் மேலும் மோசம் அடையும்.

பொதுவாகவே, தாக்கரே இப்படியெல்லாம் வன்மத்துடன் வன்முறையைத் தூண்டும் விதமாகவும் பேசக் கூடியவர்தான். இம்முறை அவர் பேச்சைத் தூண்டியிருப்பது மத்திய அரசின் மிகத் தவறானதொரு முடிவு: பாகிஸ்தான் எல்லையில் நிறுத்தப்பட்டுள்ள ராணுவத்தை, வருகிற டிசம்பர் 18ஆம் தேதிக்கு முன்னதாக வாபஸ் பெறப் போவதாக அறிவித்துவிட்டது மத்திய அரசு.

இம்முடிவை ஐரோப்பிய யூனியனும் அமெரிக்காவும் இந்தியா மீது திணித்ததாகச் சொல்லப்படுகிறது. உடனே இந்த நடவடிக்கை எடுக்கும்படியும் பாகிஸ்தானுடன் பேச்சு வார்த்தைகளை மீண்டும் ஆரம்பிக்குமாறும் அவர்கள் கேட்பது வாஸ்தவம்தான். ஆனால், கார்கிலுக்குப் பிறகு படைகள் எல்லையில் காவலில் நிறுத்தப்படவேண்டும் என்ற முடிவில் மிக உறுதியாய் இருந்தது மத்திய அரசு. பேச்சுவார்த்தை மீண்டும் தொடங்க வேண்டுமானால் படைகள் பின்வாங்க வேண்டும் என்று முஷாரஃப் விதித்த நிபந்தனையை ஏற்க மறுத்தார்




பிரதமர்.

இப்போது அந்த உறுதி ஏன் தளர்ந்தது என்பதுதான் வியப்புக்கும் வேதனைக்குமுரிய கேள்வியாய் இருக்கிறது.

தாக்கரேவின் முஸ்லிம் விரோத பாய்ச்சலை நாம் நூறு சதவிகிதம் எதிர்த்தாலும் எல்லையிலிருந்து துருப்புகள் தற்போது வாபஸ் பெறப்படக் கூடாது என்கிற அவர் கருத்தை அதே நூறு சதவிகிதம் ஆதரித்தாக வேண்டும்.

பாகிஸ்தானில் நடந்த தேர்தலில், தாலிபான் ஆதரவாளர்களே வெற்றி பெற்றுள்ளனர். இந்நிலையில் அங்கே பயங்கரவாதம் வளரவும் பாதுகாக்கப்படவும் இன்னும் வளமான சூழல் ஏற்பட்டுள்ளது. பயங்கரவாதிகளின் முதல் இலக்கு இந்தியாவாக, காஷ்மீராகத்தான் இருக்கும்.

இன்றைய காஷ்மீரிலோ எந்தக் கட்சிக்கும் தனிப்பெரும்பான்மை இல்லாத காரணத்தால், கூட்டணி அரசுதான் ஆட்சி அமைக்கிறது. மத்திய கூட்டணியில் இடம்பெறாத கட்சிகளைக் கொண்ட இவ்வரசு, ஒவ்வொரு காரியத்தையும் புது டில்லியுடன் முட்டி மோதித்தான் சாதித்துக் கொள்ள வேண்டிவரும். இந்நிலையில், ராணுவம் எல்லைப்புறத்திலிருந்து வாபஸ் பெறப்படுவது, அரசுக்கும் மக்களுக்கும் மிகுந்த சங்கடத்தையே ஏற்படுத்தும். பாகிஸ்தானுடன் நல்லுறவுக்கு வழிவகுக்கப்பட்ட பிறகுதான் நமது படைகளின் வாபஸ் பற்றி யோசிக்க வேண்டும்.

தேர்தலில் காஷ்மீர் மக்கள் பா.ஜ.கவையும் தேசிய மாநாட்டுக் கட்சியையும் நிராகரித்து விட்டனர். இதன் காரணமாகவே மனம் கசந்துபோய், மத்திய அரசு இந்த அசந்தர்ப்பமான வேளையில் ராணுவப் பின்வாங்குதலை அறிவித்திருப்பதாக முடிவு செய்ய வேண்டியிருக்கிறது.

தாக்கரே, இஸ்லாமிய சகோதரர்களைப் பிரித்துப் பார்க்கிறார் எனில், பா.ஜ.க. காஷ்மீர் மக்களைப் பிரித்துப் பார்க்கிறது. இந்த அரசியல் சின்னத்தனத்தின் விலை மிகப் பெரிதாக, கொடூரமானதாக இருக்கும். அதிலும் டிசம்பர் 18க்குப் பிறகு எல்லைப் புற ராணுவ நிதி நிறுத்தப்படும் என்ற பகிரங்க அறிவிப்பு, திட்டமிட்ட, பாக். ஆதரவு பயங்கரவாதத்துக்கு நாமே காட்டுகிற பச்சைக்கொடியாகத்தான் அமையும். ○

கோமேதகம் ◆ புஷ்பராகம் ◆ நீலம் ◆ வைடூரியம் ◆ முத்து

# புக்பேங்க்

**தமிழோவியம் - ஈரோடு தமிழன்பன் கவிதைகள்.**

"இது மரபுக் கவிதை நூலும் இல்லை; புதுக்கவிதை நூலும் இல்லை,. சரிகமபதநி களின் சந்திப்புக்கும், கை குலுக்கலுக்கும் காத்திருக்கும் உருப்படிகளுக்குத் தூரத்து உறவு என்று சொல்வதை விட, தேன் சிந்தும் சிந்துகளுக்கு நெருக்கமான சொந்தமென்று சொல்லாம்" என்று முன்னுரையில் குறிப்பிட்டிருக்கிறார் ஆசிரியர்.

பூம்புகார் பதிப்பகம், 63, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை - 108, விலை ரூ. 70.

**பாப்லோ நெருடா - வாழ்வும் கவிதையும்- எஸ்.ஏ. பெருமாள்**

லத்தீன் அமெரிக்கக் கவிஞரான பாப்லோ நெருடாவின் வாழ்க்கை வரலாற்றோடு அவரின் சில கவிதைகளையும் கொண்டிருக்கிறது இப் புத்தகம்.

ரெட்ஸ்டார் பப்ளிகேஷன்ஸ், 322-பி, வி.பி. சிந்தன் தெரு, பெத்தானியாபுரம், மதுரை-16, விலை ரூ.30

**பொன்னியின் செல்வன் - அமரர் கல்கி**

அமரர் கல்கியின் நாவல்கள் நாட்டுடைமையாக்கப்பட்டபின் பல்வேறு பதிப்பகத்தினர் அவரின் நாவல்களைப் பதிப்பித்து வருகின்றனர். எப்போதும் தித்திக்கும் இந் நாவல் பக்கத்துக்குப் பக்கம் மாருதியின் படங்களுடன் வந்திருக்கிறது.

சாரதா பதிப்பகம், நி-4, சாந்தி அபார்ட்மெண்ட், 3, ஸ்ரீகிருஷ்ணாபுரம் தெரு, ராயப்பேட்டை, சென்னை - 14, விலை ரூ.200
















**ஜீவாவும் நானும் தா. பாண்டியன்**

பொதுவுடைமை வாதியான ஜீவாவுடன் தமக்கு நேர்ந்த அனுபவங்களை நேர்த்தியாகத் தொகுத்திருக்கிறார் ஆசிரியர்.

விஜயா பதிப்பகம், 20, ராஜவீதி, கோவை -1, விலை ரூ.100

**ஏகாந்த ராமன் - சீதா ரவி**

சிறுகதைகள். கல்கி இதழில் வெளியான ஆசிரியரின் இருபத்தியோரு சிறுகதைகளைக் கொண்ட தொகுதி. பெரும்பாலான சிறுகதைகள் சங்கீதம் பற்றிப் பேசுகின்றன.

பல்லவி பதிப்பகம், 66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர், சென்னை - 78, விலை ரூ. 55

- தம்பி

பலன் தரும் பண்ணை நிலம் – பழத்தோட்டம் – சொந்தமாக வாங்குதல் – செய்தி

# "கல்கி வார இதழ்கள் 5 ஆண்டுகளுக்கு அன்பளிப்பு"

வாலாஜாபாத் அருகே (காஞ்சிபுரம் செல்லும் வழி) பாலாற்றங்கரையில் ஆசூர் கிராமத்தில் முன்பு அறிவித்த திட்டத்தின்படி ஏற்றுமதித் தரம் வாய்ந்த மாங்கன்றுகள் ஏற்கெனவே நடப்பட்டு பராமரிக்கப்பட்டு வருகின்றன. பலர் அந்த நிலங்களை வாங்கியுள்ளனர்.

புதிய திட்டத்தின்படி 1200 ச.அடி உள்ள பண்ணை நிலங்கள் ரூபாய் 20,000/– மட்டுமே

உங்கள் வாழ்நாள் முழுமையும், பிறகும் உங்கள் குடும்பத்திற்கு ஆண்டுக்கு ஒரு முறை கணிசமான வருமானம் கிடைக்கும். முழு தொகையும் மொத்தமாக கொடுப்பவர்களுக்கு சலுகை விலையில் ரூ.18,000/– மட்டுமே.

உடனே எங்கள் செலவில் பத்திரம் பதிவு செய்து தரப்படும். விலை கொடுத்து வாங்கிய நிலம்உங்களுடையதாகிவிடுகிறது.

அந்த நிலத்தை கட்டாந் தரையாக விடாமல் நல்ல வருவாய் தரும் மாங்கன்றுகளை நட்டு, உங்களுக்குக் கவலையில்லாமல் நாங்களே பராமரித்துத் தருகிறோம்.

5 ஆண்டுகளுக்குப் பிறகு மாங்கனிகள் விற்பனை மூலம் கிடைக்கும் வருவாய் வாழ்நாள் முழுமையும் உங்களுக்குத்தானே.

5 அல்லது 6 ஆண்டுகளில் சுவையான மாங்கனிகள் உள்நாட்டில் வெளிநாட்டில் விற்பனை மூலம் ஆண்டிற் கொருமுறை நல்ல வருமானம் ஈட்டலாம்.

ரூ.18,000 மொத்தமாகக் கொடுக்க முடியாதவர்களுக்கு மாதம் ரூபாய்.500 வீதம் 40 மாதாந்தர தவணைகளில் செலுத்தும் தவணைமுறைத் திட்டமும் உண்டு.



(வளர்ந்த செடியின் அருகில் கலைமாமணி விக்கிரமன்)

இந்த புதிய திட்டத்தின்படி பண்ணை நிலங்கள் வாங்கும் அனைவருக்கும் ஐந்து ஆண்டுகளுக்கு வைரவிழா காணும் "கல்கி" வார இதழ்கள் அன்பளிப்பாக அனுப்பப்படும்.

மேலும் "இலக்கியப்பீடம்" எனும் உயர்தர மாத இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அன்பளிப்பாக அனுப்பப்படும்.

மேலும் விவரங்களுக்கு.



தொடர்பு கொள்க : அன்னை ஆர்ச்சர்ட்ஸ் (பி) லிட்.,
3 ஜெயசங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை–600 033.
தொலைபேசி : 371 2485
E-mail : manivikraman@yahoo com

இப்படிக்கு வி.வி.எஸ். மணியன், இயக்குநர், அன்னை ஆர்ச்சர்ட்ஸ் (பி) லிட்.,

அடுத்த இதழ்...

# கல்கி



யுகபாரதி

எழுதும்

## தீபாவளி கொண்டாட்டம்!

## ஹாய்!

—சொல்ல வருகிறார்



பா. ராகவன்



## ஆடைச் சிறப்பிதழ்

காதல் சொல்லசே!

கவிதை தொடர்

# நாலு நிமிஷ சுவை!



—ஸ்வீட் செய்து காட்ட வருகிறார்

**மெனு ராணி செல்லம்**

**இணைப்புப் புத்தகத்துடன் அதிக பக்கங்கள்!**

சென்னை மாநகர போக்குவரத்துக் கழகத்தில் பணிபுரியும் எந்த ஊழியருக்கும் பெட்டிஷன் பெரியசாமியைத் தெரியாமல் இருக்க முடியாது. 'பெட்டிஷன்' என்றால் மொட்டை பெட்டிஷன் என்று நினைத்து விடாதீர்கள். பொதுநன்மைக்காக போடப்படும் ஆதார பூர்வமான பெட்டிஷன்கள் அவை. தனது உயிருக்கும் உடைமைகளுக்கும் சேதம் ஏற்பட்டதை, ஏற்படும் ஆபத்துள்ளதைப் பற்றிக் கவலைப்படாமல் போக்குவரத்து நிர்வாகத்தில் நடக்கும் ஊழல்களைத் தோலுரித்துக் காட்டும் துணிச்சல் மிக்கவர்தான் இந்தப் பெரியசாமி.

பெரியசாமி முதலில் அம்பலப்படுத்த நினைத்து கையிலெடுத்த விவகாரம் O.D (other duty) எனப்படும் தில்லுமுல்லு. ஒவ்வொரு டிப்போவிலும், பல்வேறு கட்சி தொழிற்சங்கங்களைச் சேர்ந்த, குறைந்தது பத்துப் பேராவது O.D என்ற பெயரில் மாதம் முழுவதும் வேலை செய்யாமல் சம்பளம் மட்டும் வாங்கிக் கொண்டிருந்த தில்லுமுல்லுதான் அது. இந்தப் போக்கைக் கண்டும் காணாமலும் அதிகாரிகளும் உடன்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

''டிக்கெட் கட்டணத்தை ஒவ்வொரு முறை உயர்த்தும்போதும், நிர்வாகத்தில் நஷ்டம்; வேறு வழியில்லாமல்..' என்று அரசு புலம்புவது அபத்தம்..நிர்வாக ஓட்டைகளைச் சரி செய்து வருமானத்தை அதிகப்படுத்த வழிகள் இருந்தாலும், அதைச் செய்யும் துணிச்சல் இல்லாதது மட்டுமல்ல; தவறைத் தட்டிக் கேட்கும் உணர்வுகூட இல்லாமல் போய்விட்டது அவர்களுக்கு'' என்று பொங்குகிறார் பெரியசாமி.

''தமிழ்நாட்டில் முந்நூறு பஸ் டிப்போக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு டிப்போவிலும் பத்து ஊழியர்கள் O.D என்ற பெயரில் ஊர் சுற்றிக் கொண்டு, சொந்த வேலை பார்த்துக் கொண்டு திரிகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் சம்பளம் மாதம் சுமார் எட்டாயிரம் ரூபாய் என்று வைத்துக் கொள்ளுங்கள். இந்தக் கணக்கில் பார்த்தால் ஒவ்வொரு மாதமும் போக்குவரத்துக் கழகங்களுக்கு இரண்டரை கோடி ரூபாய் நஷ்டமேற்படுகிறது. இது தவிர, அந்த ஊழியர்கள் வேலை செய்யாததால் அவர்கள் பணி செய்ய வேண்டிய பேருந்துகள் ஓட்டப்படாமல் டிப்போவிலேயே நிற்பதால், அதன் மூலம் கோடிக்கணக்கான ரூபாய் வருவாய் இழப்பும் ஏற்படுகிறது'' என்கிறார் பெரியசாமி.

இந்த விவகாரத்தில் முழு ஆதாரங்களோடு தி.மு.க ஆட்சியில் ஊழல் ஒழிப்பு இணை ஆணையாளராக இருந்த உமாசங்கரிடம் நடவடிக்கை எடுக்க மனு கொடுத்தார் இவர். அவர் நடவடிக்கை எடுக்கத் தயாரான தருணத்தில் அவருக்கு மாற்றல் வந்துவிட்டது.

# பெட்டிஷன் பெரியசாமி!

ஆனால் மனம் தளர்ந்து விடாமல், பல ஊழல்களை உள்ளடக்கி உயர்நீதிமன்றத்தில் பொது நல வழக்கு தாக்கல் செய்துவிட்டார் பெரியசாமி. ''இந்த O.D விவகாரத்தைப் போக்குவரத்து நிர்வாகம் சரி செய்துவிட்டால் கோடிக்கணக்கான வருவாய் இழப்பைச் சரிக்கட்ட முடியும். யூனியன் பணிகளைச் செய்ய O.D என்கிறார்கள். டூட்டியை முடித்துவிட்டு, மிச்ச நேரத்தில்தான் யூனியன் பணிகளைப் பார்க்க வேண்டும் என்று சுப்ரீம் கோர்ட்டே சொல்லியுள்ளது'' என்கிறார் பெரியசாமி. இதைக் கண்டு சும்மா இருந்து விடுவார்களா யூனியன் ஆட்கள்? பங்குக்குப் பழி வாங்கத் துவங்கிவிட்டார்கள். இதற்கு நிர்வாகமும் துணை போனது. பெரியசாமியின் பணியில் குற்றம், குறைகள் இருக்கிறதா என்று

பூதக்கண்ணாடி வைத்துப் பார்க்கத் துவங்கினார்கள். ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. பொய்ப் புகார், போலி ஆவணங்கள் என்று வழக்கு ஜோடித்தார்கள். எல்லாவற்றையும் சந்தித்து சமாளித்து, இன்று பெசன்ட்நகர் டிப்போவில் வேலை செய்துகொண்டிருக்கிறார் பெரியசாமி. அநீதிகளை எதிர்த்து உண்ணாவிரதமும் இருந்திருக்கிறார். "திருவான்மியூர் டிப்போவில் வேலை செய்யும்போது தி.மு.க ஆட்சியில் என்னைத் தாக்கினார்கள். தாம்பரம் பக்கம் வசிக்கும் என் மகனையும் மருமகளையும் தாக்கி, "உங்கப்பாவை கேஸை வாபஸ் வாங்கச் சொல்" என்று மிரட்டினார்கள்" என்கிறார் அவர். எட்டு மாத காலம் திருவான்மியூர் டிப்போவில் பொறுப்பில் இருந்தபோது எந்த ஊழியருக்கும் O.D கொடுக்காமல் நிர்வாகத்தை நடத்தியிருக்கிறார் பெரிய சாமி.

இந்த O.D விவகாரம் மட்டுமல்ல; வேறு பல விவகாரங்களையும் கிளறி அதிகாரிகளின் அதிருப்திக்கு ஆளாகியிருக்கிறார் இவர். ஹரியானா போக்குவரத்து கழகம் தமிழக



போக்குவரத்துக் கழகத்திற்கு ஐம்பத்தாறு லட்சம் ரூபாய் கொடுக்க வேண்டியிருந்தது. இது தொடர்பான வழக்கு சண்டிகர் நீதிமன்றத்தில் நடந்துகொண்டிருந்தது. அந்த வழக்கு சம்பந்தமாக சண்டிகர் சென்று வருகிறோம்" என்று அதிகாரிகள் அடிக்கடி விசிட் அடித்ததில் போக்குவரத்துக் கழகத்திற்கு ஆன செலவு அறுபத்து நான்கு லட்சம்.. இதைக் கேள்விப்பட்டுக் கொதித்தெழுந்த பெரியசாமி, பொதுநல வழக்கு போட, ஹரியானா போக்குவரத்துக் கழகம் இருபத்தெட்டு லட்ச ரூபாயை உடனே கொடுத்துவிட்டது. இது தவிர, தமிழகத்திலுள்ள டிப்போ கிளை மேலாளர்கள் ஜீப்புகளை உபயோகப்படுத்தாமல் பேருந்துகளில் சென்றால் போக்குவரத்துக் கழகத்திற்கு மாதம் ஐம்பத்தைந்து லட்சம் மிச்சமாகும் என்று புள்ளிவிவரமும் சொல்கிறார் பெரியசாமி. தலைமை அலுவலகத்தில் நல்ல ஏ.ஸி மாநாட்டு அரங்கம் இருந்தபோதும், நட்சத்திர ஹோட்டல்களில் அதிகாரிகள் கூட்டம் நடத்தி, லட்சக்கணக்கில் செலவு செய்ததையும் அம்பலப்படுத்தியிருக்கிறார் இந்த பெரியசாமி.

சந்திப்பு: ஸ்ரீநிவாசன்
படம்: ராஜன்



• சித்திக்

தர்மபுரி மாவட்டக் கலெக்டராக நான்கு மாதங்களுக்கு முன்புதான் பொறுப்பு ஏற்றிருக்கிறார் எம்.ஏ. சித்திக்.

சிவகாசியில் 97-98 ஆம் ஆண்டுகளில் துணை கலெக்டராக இருந்தபோது, 'சிறந்த சிவில் ஆபீசர்' என்ற விருதை வாங்கியிருக்கிறார் சித்திக். அதனால்தானோ என்னவோ, வறட்சி, பெண் சிசுக்கொலை, நக்ஸலைட் பிரச்னை என்று தவித்துக்கொண்டிருக்கும் தர்மபுரி மாவட்டத்துக்கு இளைஞர் சித்திக்கை ஆட்சியராக நியமித்திருக்கிறார்கள்!

## தர்மபுரிக்குப் பெருமை

ஓசூரில் தொழில் வளர்ச்சிக்கான தொழிற்பேட்டை இருப்பது புதிய செய்தி அல்ல.

ஆனால் அங்கு துவங்கப்பட்டிருக்கும் மலர் ஏற்றுமதி மையம் நிச்சயம் தர்மபுரிக்குப் பெருமை சேர்க்கும். விவசாயிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த இந்த மையம் உதவியிருக்கிறது. நெதர்லாண்ட், ஆஸ்திரேலியா போன்ற அயல்நாடுகளுக்கு, ரோஜா ஏற்றுமதி செய்யப்படுகிறது. கட் ஃப்ளவர்ஸ் எனப்படும் அறுமலர்கள் வகையைச் சேர்ந்த ஒட்டு ரோஜா, கிளாடியோலஸ், காரனேஷன், ஆந்தூரியம், லிமோனியம் எல்லாம் தனியார் மலர் உற்பத்தி நிறுவனங்கள் வாயிலாக, வெளிநாட்டுச் சந்தைகளுக்கு நிறைய அனுப்பப்படுகின்றன. இவற்றின் மதிப்பு சுமார் நாற்பத்தைந்து கோடி ரூபாய். நவீனமான பசுமைக் குடில்களில்

# மலரே, மலரே!

(க்ரீன் ஹவுஸ்) இவை பயிர் செய்யப்படுகின்றன.

தோட்டக்கலைத்துறை சார்பாகத் தேர்வு செய்யப்பட்ட விவசாயிகளுக்கு உரிய பயிற்சியும், தொழில்நுட்ப உதவியும், மானிய விலையில் இடுபொருட்களும் வழங்கி வருகிறார்கள். விவசாயிகளின் வருமானம் பல மடங்கு உயரவும், பல்லாயிரக் கணக்கான வேலையற்ற இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பும் கிடைக்க இந்தத் திட்டம் உதவியிருக்கிறது. மாவட்டத்தின் பொருளாதார மேம்பாட்டுக்கு இது போன்ற புதிய திட்டங்கள் நிச்சயம் உதவும்.

தர்மபுரியின் பணப்பயிர் மாம்பழம்தான். மாம்பழக் கூழ்

தயாரிப்புத் தொழிற்சாலை மத்தூர் பஞ்சாயத்து யூனியனில் செயல்படுகிறது. மாம்பழக் கூழ் தயாரித்து, 'பேக்' செய்யும் கலையை அறிய, பிற மாநிலங்களில் இருந்தும் பலர் வந்து பார்வையிட்டுச் செல்லுகிறார்களாம்.

அட்டைப் பெட்டிகள் தயாரிப்பிலும், ஆயத்த ஆடைகளின் தயாரிப்பிலும்கூட தர்மபுரி முன்னே நிற்கிறதாம். மாவட்டத்தில் வேலை வாய்ப்புகள் பெருகவும், வருவாய் கூடவும் இவை நிச்சயம் உதவும். நக்சலைட் பிரச்னை பெருமளவுக்குக் குறைந்திருப்பதற்கு, இந்தப் புதிய தொழில் முயற்சிகள் கூடக் காரணமாக இருக்கலாம்.



## வறட்சி

தண்ணீர் பிரச்னையால் பாதிக்கப்பட்ட பதினெட்டு பஞ்சாயத்துகளுக்கு நேரடி விசிட் செய்து, அதிகபட்சமாக பாதிக்கப்பட்ட அரூர், ஊத்தங்கரை, பென்னகரம், நல்லம்பள்ளி, பாலக்கோடு, பாப்பிரெட்டிப்பட்டி மற்றும் தர்மபுரியில் ஆழ்துளைக் கிணறுகள் தோண்டவும், நீர் நிலைத் தொட்டிகள் கட்டவும் மொத்தம் ஒன்றேகால் கோடி ரூபாய் ஒதுக்கி, பணிகளைத் தொடங்கியிருக்கிறார்கள்.

## ஃப்ளோரைடு பிரச்னை

தமிழ்நாட்டிலேயே, தண்ணீரில் ஃப்ளோரைடு அதிகமாகக் காணப்படுவது தர்மபுரி மாவட்டத்தில்தான். (பற்கள் பழுப்பு நிறமாவதோடு, எலும்பையும் பாதிக்கும் ஃப்ளோரைடு மிகுந்த தண்ணீர்) எந்தெந்தப் பகுதிகளில் மிக அதிகம் இருக்கிறது என்று போர்வெல் வாரியாகப் புள்ளிவிவரம் சேகரித்து, முப்பது சதவிகிதம் கிணறுகளில் இப்படி இருப்பதாக அறிந்து, இவர்களுக்கு மாற்றுத் தண்ணீர் வழங்க, 4.71 கோடி





# டாப்டென் கலெக்டர்கள்-8

ரூபாய்த் திட்டத்தில் ஆற்றுப்பாங்கான பகுதியிலிருந்து ஃப்ளோரைடு பாதிப்பு இல்லாத தண்ணீரை வழங்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மொத்தம் பாதிக்கப்பட்ட ஆயிரத்து இருபத்தெட்டு குடியிருப்புகளில், ஆயிரத்து இருபது குடியிருப்புகளுக்கு சுத்தமான குடிநீர் வழங்க ஏற்பாடுகள் முடிந்துவிட்டன. இனி எட்டுதான் மீதி.

## பெண் சிசுக்கொலை

தீவிரப் பிரசாரம் மூலமாக



விழிப்புணர்ச்சி ஏற்படுத்தி வருவதால், முன்பு இருந்த நிலையைவிட, இப்போது எழுபத்தைந்து சதவிகிதம் குறைந்திருப்பதாகச் சொல்லுகிறார் கலெக்டர் சித்திக். ஆனால், இன்னும் அந்த மனோபாவம் முழுதும் மாறாததால், சில பகுதிகளில் இந்தக் கொடுமை தொடர்கிறது. எந்தெந்தப் பகுதிகள் என்று கண்டறியப்பட்டு, மேலும் கவனமாகச் செயல்படத் துவங்கி இருக்கிறார்கள்.

## மகளிர் சுய உதவிக் குழுக்கள்

நாட்டிலேயே தர்மபுரியில்தான் அதிக மகளிர் சுய உதவிக் குழுக்கள் இருப்பதாகச் சொல்லுகிறார் ஆட்சியர். வங்கிகள் தனிப்பட்டவர்களுக்குக் கடன் கொடுக்காமல், குழுக்களுக்கே கடனுதவி அளிக்கின்றனவாம். எனவே நூறு சதவிகிதம் பணம் திரும்பிக் கிடைத்து விடுகிறது. நாட்டிலேயே இதுதான் 'பெஸ்ட்' என்கிறார்.

---

"நாங்க சி.பி.ஐ அதிகாரிகள்; உங்களைக் கைது பண்ண வந்திருக்கோம்."

"ஒரு நிமிஷம் வெய்ட் பண்ணுங்க. என் மச்சானுக்கு ஃபோன் போட்டுச் சொல்லிட்டு வந்துடறேன்."

"அவரை ஏற்கெனவே கைது பண்ணி உள்ளே வச்சாச்சு, நீங்க ஜெயில்லயே போய் சொல்லிக்கலாம்!"

- சீர்காழி வி. ரேவதி





## கம்ப்யூட்டர் நிர்வாகம்

மேஜையில் ஒரு 'லேப்டாப்' வைத்திருக்கிறார் சித்திக். புள்ளி விவரங்களைத் தெரிந்துகொள்ள பட் பட்டென்று தட்டுகிறார். "நான் இங்கேயிருந்து போவதற்குள் அதிகபட்ச கம்ப்யூட்டர் நிர்வாகத்தை அறிமுகப்படுத்திவிட்டுத்தான் போவேன்!" என்கிறார், உறுதியாக.

## குறைகள்/ விண்ணப்பங்கள்

ஒரு வாரத்தில் சுமார் நானூறு விண்ணப்பங்கள் வருகின்றன. வருகிற குறைகள் எல்லாம் பெரும்பாலும் நிலத்தகராறு, தண்ணீர்ப் பிரச்னை, போலீஸ் கேசுகள், முதியோர் பென்ஷன் என்ற ரீதியில் வருகின்றன. கூடுமானவரை இவற்றுக்கு நடவடிக்கை எடுத்து பிரச்னைகளைத் தீர்த்து வைக்கிறார்.

## ஓசூரில் ஒருநாள்

எல்லா மாதமும் மூன்றாவது வியாழக்கிழமை, ஆட்சியரின் அலுவலகமே மொத்தமாக ஓசூரில்தான் இயங்குகிறது. அந்தப் பகுதி மக்கள் தர்மபுரிக்கு வர வேண்டிய அவசியமே இல்லாமல், நிர்வாகத் தலைமையே ஒருநாள் முழுக்க அங்கே முகாம் இடுகிறது. விவாதிக்கப்படும் பிரச்னை தீரவில்லை என்றால் அடுத்த மாதக் கூட்டத்தில், பாதிக்கப்பட்ட நபர் மறுபடி பிரச்னையை எழுப்புவார். அதைத் தீர்த்து வைக்கவோ, பாதிக்கப்பட்ட நபருக்குத் திருப்தியான பதிலை அளிக்கவோ நிர்வாகம் மறுபடி முனைகிறது.

## ஒகேனக்கல் - சுற்றுச்சூழல்

நீலகிரியைப் போலவே, இங்கேயும் சுற்றுலாத்தலம் என்கிற பெருமையைக் காப்பதற்காக, பாலிதீன் - ப்ளாஸ்டிக் வகையறாக்களைத் தடை செய்திருக்கிறார். இளைஞர்கள், தொண்டு நிறுவனங்கள் உதவியுடன் பேரணி நிகழ்த்திவிட்டு திரும்பியிருந்தார் சித்திக். "மறுபடி அங்கே போய்ப் பார்க்கப் போகிறேன். நல்ல பணி எப்போதும் தொடர வேண்டும்!" என்கிறார் புன்முறுவலுடன்.

சந்திப்பு: சாருகேசி

இரவு நேரம். தலைகளை எண்ணிப் பார்த்த கண்டக்டர் பயணச் சீட்டுகளையும் சரிபார்த்து 'ரைட்' என்றார். மெல்லப் புறப்பட்ட பஸ் வேகமெடுத்தது. புறப்பட்ட சற்று நேரத்திலேயே பஸ்ஸில் அனைவரும் குறட்டைவிடத் தொடங்கி விட்டிருந்தார்கள். நரேனுக்கு உறக்கம் பிடிக்கவில்லை. மனத்தில் வரிசையாக நினைவுகளின் ஊர்வலம்.

நரேன் திருச்சி என்ஜினியரிங் காலேஜில் பி.டெக் இரண்டாம் வருடம் படிக்கும் மாணவன். சொந்த ஊர் சென்னை. ஹாஸ்டல் வாசம். அன்று யதேச்சையாகத் தமிழ் தினசரி ஒன்றைப் புரட்டியபோது புகைப்படத்துடன் வெளியாகியிருந்த செய்தியைப் படித்தவன் திடுக்கிட்டான். ஏறக்குறைய நாற்பது பெண்களும் ஆண்களும் ஜெயின் சந்நியாசினி - சந்நியாசிகளாக, ஒரு ஜெயின் துறவி - குருவின் முன் தீட்சை பெற்ற தான செய்தி. அவற்றில் ஒருத்தி பதினேழு வயதான ஷ்வேதாதேவி. பிரபல கோடீஸ்வர வைர வியாபாரியின் ஒரே மகள். தீட்சை பெற்ற பிறகு 'தாருல்தேவி' யாகப் பெயர் மாற்றம். சந்நியாசினியாகுமுன் தன் பங்காகத் தந்தையிடமிருந்து பெற்ற பதினாறு கோடி பெறுமானமான தங்க - வைர நகைகள், ஏராளமான பணம் முதலானவற்றை ஹெலிகாப்டரிலிருந்து இல்லாதவர்களுக்கு வீசி, வாரி வழங்கிய ஃபோட்டோ வெளியாகியிருந்தது. அதற்கு முன் தினம் சர்வாலங்காரபூஷிதையாகத் தங்க, வைர நகைகள் அணிந்து வைரங்கள் பதித்த, நிரம்ப ஜரிகைகளுடன் கூடிய விலை உயர்ந்த வெல்வெட் உடை உடுத்தி, யானைமேல் ஊர்வலம் வந்ததையும் ஃபோட்டோ எடுத்து வெளியிட்டிருந்தார்கள். கூடவே ஜெயின் சந்நியாசி - சந்நியாசினி ஆவதைப்பற்றிய சிறு குறிப்பும் வெளியிடப்பட்டிருந்தது.

ஆடம்பரம் கூடாது. வாகனங்கள் உபயோகிக்கக் கூடாது. மின்சாரம் கூடாது. தலைமுடி நீக்கக்கூட, கத்தி, ரேசர் கூடாது. ஒவ்வொரு முடியாக வெறும் கையினால் மட்டுமே பிடுங்கப்பட வேண்டும்.

இவற்றைப் படிக்கும்போது நரேனின் கண்களில் கண்ணீர் தளும்பிவிட்டது. முதன்முதல் ஷ்வேதாவைச்

# துறவி

சந்தித்த நினைப்பு. சென்னையின் பெரிய ஆடம்பரமான குடியிருப்பிலிருந்தது நரேனின் வீடு. தங்க, வெள்ளி வியாபாரி, நரேனின் தந்தை. அதே தெருவில் ஒரு பழைய பிரும்மாண்டமான வீட்டை வாங்கிப் பெரும் மாளிகையாகக் கட்டி ஷ்வேதாவின் தந்தை குடி வந்திருந்தார். பம்பாயிலிருந்து வந்திருந்த அவர் பல கோடிகளுக்குச் சொந்தக்காரர். சென்னையின் விரல் விட்டு எண்ணக்கூடிய பெரும் கோடீஸ்வரர்களில் ஒருவர். அவருடைய ஒரே மகள் ஷ்வேதா; வீட்டில் ஏராளமான பணியாட்கள், ஐந்தாறு பெரிய கார்கள்.

நரேனுக்கு ஷ்வேதாவை முதன்முறையாகப் பார்த்த ஞாபகம் நன்றாக இருந்தது. மலர்ந்த ரோஜாப்பூவைப் போன்ற முகம். கரிய பெரிய,

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்

பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட

# வைட்டமின் சிறுகதை - 8



● ஜாஜ்வல்யா

சாந்தமும், கனிவும் தெரியும் கண்கள், பனி ரென்ற மென்மையான, வரிசையான பற்கள். அடர்த்தியாக, முழங்காலுக்குக் கீழே நீண் டிருந்த பின்னலிடப்பட்டிருந்த முடி. ஐந்தாறு வயது இருக்கும் அப்போது. நிறைய நகைகளும் விலை உயர்ந்த ஆடைகளும் அணிந்து நரேன் வீட்டுக் கேட்டைப் பிடித்து, ரோஜாக்களைப் பரவசத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். ரோஜாக்கள் மத்தியில் அன்றலர்ந்த ரோஜா வைப் போல் அவள் முகம் 'தொட்டாலல்ல, தொடுவேன்' என்று சொன்னாலே மலர்ந்து சிவந்து விடும் நிறத்திலிருந்தது. நரேன் தன் பாட்டியுடன் பூஜைக்காகப் பூக்களைப் பறித்துக் கொண்டிருந்தான்.

''இந்தா!'' - நரேன் பெரிய பட்டு ரோஜாவை நீட்டினான்.

"வேண்டாம்! செடியிலேயே பறிக்காமலே இருந்தாத்தான் அழகு"

''பரவாயில்லேம்மா, வாங்கிக்கோ, இது ஏற்கெனவே பறிச்சதுதானே!"

தயக்கத்துடன் பூவை வாங்கிக் கொண்ட ஷ்வேதா சொன்னாள். ''இல்லே பாட்டி, பூவைப் பறிச்சாச் செடிக்கு வலிக்குமோன்னு தோணுது பாட்டி."

பாட்டிக்கு ஆச்சரியம். 'இத்தனைச் சிறிய பெண் எப்படிப் பேசுது பார்' என்று. நரேனும் பாட்டியும் ஷ்வேதாவுக்கு, 'குலாபி' என்று பொருத்தமான பெயர் வைத்தார்கள். நரேனின் வீடு முச்சந்தியில் இருந்ததால் காம்பவுண்ட் சுவரில் பிள்ளையார் வைத்துத் தினமும் விளக்கேற்றிப் பூஜை செய்வார்கள். தினமும். பிள்ளையாருக்கு வைக்கும் பூக்களில் பெரிதான ரோஜாவை குலாபிக்குக் கொடுப்பதை வழக்கமாகக் கொண்டான் நரேன்.

சிறிது சிறிதாக வளர்ந்தது நட்பு. தினமும் குலாபி, நரேன் வீட்டிற்கு வந்து போகுமளவிற்கு.

நரேனுக்குச் சிறுவயதிலிருந்தே காலில் சிறிது ஊனம். இலேசாக வளைந்திருக்கும். டாக்டர் கூறியிருந்தார். 'ஒரு சிறிய ஆபரேஷன் மூலம் சரி செய்து விடலாம்' என்று. பாட்டிக்குத்தான் பயம். ஏதாவது ஆகிவிடுமோ என்று.

விளையாடும்போது சண்டை வந்தால் தெருப்பிள்ளைகள் நரேனை 'நொண்டி' என்று கிண்டல் செய்தால் கோபத்துடன் அவர்களை அடித்து உதைத்து விடுவான். குலாபிதான் அவனைச் சாந்தப்படுத்தியிருந்தாள்.

"பார்! நீ நொண்டின்னா அது உன் தப்பில்லே! கடவுள் செய்தது. உன்னை அப்படிச் சொல்ற அவங்க எல்லாமே மனசளவிலே நொண்டிங்க. அதனாலே நீ கோபப்படவோ, வெட்கப்படவோ தேவையில்லே. அவங்கதான் வெட்கப்படணும்."

கொஞ்சம் கொஞ்சமாக நரேனின் மூர்க்கத்தனம் குறைந்து போனது, அவளது நட்பினால்.

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் தெருவை அடைத்து ஏழைகள், பிச்சைக்காரர்கள் கூட்டம். குலாபி வீட்டில் அனைவருக்கும் சாப்பாட்டுப் பொட்டலங்கள், பேக்கரியிலிருந்து பன், பிரெட் வாங்கி அளிப்பார்கள். ஆள், படை, அம்பு எனப் பலர் இருக்கையில் குலாபி தன் கைப்பட அவர்களுக்கு உணவளிப்பாள், பெரும் சந்தோஷத்துடன்.

ஒரு முறை நரேனின் பாட்டி கையில் மணிமாலை உருட்டி ராம நாமம் ஜெபிப்பதைக் காட்டிக் கேட்டான்.

"இப்போ கடவுள் நேரா உங்க முன்னே வந்தா என்ன கேட்பீங்க பாட்டி?"

"ஒண்ணுமில்லே, உன்னை மாதிரி ஒரு நல்ல பெண் என் பேரனுக்குப் பெண்டாட்டியா வரணும்னு கேட்பேன்."

"போங்க பாட்டி" பொய்யாக அலுத்துக் கொள்வாள் குலாபி.

"அது சரி, கடவுள் உன் முன்னே வந்தா நீ என்ன கேட்பே குலாபி?"

**"சம்பள நாளில்கூட டல்லாயிருக்கியே. ஏன்?"**

**"அடுத்த சம்பளத்துக்கு இன்னும் முப்பது நாள் இருக்கேன்னு நினைக்கிறபோது ஒரே ஆயாசமா இருக்குதுப்பா!"**

**- உ. ராஜாஜி**

---

"பசின்னு யாருமே இருக்கக்கூடாதுன்னு கேட்பேன். அனாதைன்னு யாரும் இருக்கக்கூடாதுன்னு கேட்பேன். எங்க அப்பா, அம்மா ஊருக்கு ரெண்டு நாள் போனப்போ வீட்டிலே சித்தி இருந்தாக் கூட நமக்கு எப்படி இருக்கு? எப்பவுமே, யாருமே அவங்களுக்குக் கிடையாதுன்னா அவங்களுக்கு எப்படி இருக்கும்?" - வருத்தப்படுவாள் குலாபி.

நரேனுக்கு குலாபி 'குரு' என்றே சொல்ல வேண்டும். அவனை சாந்தப்படுத்தி, நல்வழிப்படுத்திய குரு என்றே நினைத்திருந்தான். ஒரு முறை அவளிடமே அப்படிச் சொல்லியிருந்தான். குலாபி மட்டும் சொல்லியிருந்தாள் :

"யாருக்குமே - ரொம்ப புத்திசாலியோ இல்லை, அவ்வளவாக புத்திசாலியாக இல்லாவிட்டாலும் கூட - அவரவர் அறிவுதான் அவரவருக்கு குரு. தப்பு செய்யும்போது 'செய்யாதே' என்று அறிவு எச்சரிக்கை செய்யவில்லையா? அதையும் மீறி ஆசையில், பேராசையில் நாம் தப்பு செய்து அதன் பலாபலனை அனுபவிக்கிறோம் இல்லையா?"

தன்னையறியாமல் நரேன் எப்போது கண்ணயர்ந்தானோ. கண் விழித்தபோது பஸ் சென்னையை அடைந்து விட்டிருந்தது.

குலாபியின் வீடு ஜகஜ்ஜோதியாகக் காட்சியளித்தது. சீரியல் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஏற்கெனவே பெரிய வீடு. இன்னமும் பிரும்மாண்டமாகக் காட்சியளித்தது. மாறாக நரேனின் வீடு அமைதியாக இருந்தது. நரேனைக் கண்ட பாட்டி 'ஓ'வென்று அழுதாள். பாட்டி நம்பிக்கை இழந்து இருப்பதே பெரிய விஷயம். நிலை குலைந்து அழுவது, இன்னமும் பெரிய விஷயம்.

"ஏண்டா இந்தப் பெண்ணுக்கு புத்தி இப்படிப் போகணும்? எங்க காலத்திலே தான் சின்ன வயசிலே வீணாப் போனா, பூவும் பொட்டில்லாமே வெள்ளைப் புடவை கட்டணும். இந்தக் காலத்திலே, இந்தப் பெண் இஷ்டப்பட்டு இப்படியாகணுமா? முழங்கால் வரை நீளமா இருந்த முடி ஒவ்வொண்ணாக்



கையாலே பிடுங்கி.. ராம ராமா, என்ன கஷ்டம்டா இது? ஒரு காலத்திலே இந்தப் பெண் இந்த வீட்டு மாட்டுப் பொண்ணா வர ணும்னு ஆசைப்பட்டேன். இப்போ எங்கேயா வது கண் காணாமே இருந்தாக்கூடப் பரவா யில்லே, குடியும் குடித்தனமுமா இருந்தாச் சரின்னு தோணுது'' என்று அழுதாள்.

சாப்பிட்ட பிறகு குலாபியின் வீட்டிற்குப் போனான் நரேன். குலாபியின் தாய் தந்தைக் குத் தம் ஒரே மகள் சந்நியாசினி ஆவது குறித் துப் பெரும் மகிழ்ச்சிதான். அவள் நினைவாக எஞ்சியிருந்தது கையினால் பிடுங்கப்பட்ட, நீண்ட, கற்றையான குலாபியின் தலைமுடி, அது தவிர, வைரங்கள் இழைத்த, பெரும் ஜரிகை வேலைப்பாடுகளுடன் கூடிய வெல் வெட் ஆடைகள். துறவறம் பூண்டு வெள்ளை யாடை அணிவதற்கு முன் கடைசியாக அணிந்தது.

குலாபியின் தந்தை சந்நியாசம் வாங்கியவர் களைப் பார்ப்பது எளிதல்ல என்றும், கஷ்டப் பட்டு அனுமதி பெற்ற பிறகே சந்திக்க முடியும் என்றும் நரேனைப் பனிரெண்டு மணியளவில் மடத்தில் சந்திக்க ஏற்பாடு செய்வதாகவும் உறுதியளித்தார்.

நரேன் மடத்தில் மரத்தின்கீழே கல் பெஞ்சின்மேல் கண்கள் மூடி மௌனமாக அமர்ந்திருந்தான். குலாபியை முதன்முறை யாகச் சந்தித்தது முதல், போன முறை சந்தித் தது வரை மனத்தில் நினைவுகள் வரிசையாக ஊர்வலம் வந்தன. எப்படியாவது பேசி தங் களுக்குப் பரிச்சயமான பழைய குலாபியாக மாற்ற வேண்டுமென்று எண்ணமிட்டான்.

காலடியோசை கேட்டு மெள்ளக் கண் விழித்தான் நரேன். குலாபிதான். வெள்ளை ஆடை, துணி மறைத்த தலை, கையில் 'ஓகா' (மயிற்பீலிபோன்ற ஒன்று. துறவி நடக்கும் போது எறும்பு போன்ற சிறு உயிர்கள் மீது படாமல் விலக்க உதவுவது). பனிச்சென்ற முகம். கருணை சொட்டும் கரு விழிகள். கூடவே தெரியும் உறுதி.

"என்ன இது குலாபி? அன்பான அம்மா அப்பா, ஆடம்பரமான, வசதியான வாழ்க்கை. மனதிற்குப் பிடித்தவனை மணந்து குழந்தை, குட்டி என்று எல்லோரையும் போல் இல்லாமல் சந்நியாசினியாக என்ன வாழ்க்கை இது?" - இடைமறித்தாள் குலாபி. இல்லை தாருல்தேவி.

'நாம், நமது குடும்பம். நமது குழந்தை, குட்டிகள் என்றில்லாமல் நாம் இருப்பது உல கத்திற்காக என்று வாழ்வது பெரியதில்லையா? மனத்தில் உறுதி, வைராக்கியம் இருந்தால் பற்று போகும். பற்று போனால் நிர்வாணம் - மோட்சம் கிடைக்கும். சுக துக்கம், இன்ப துன்பம், பந்தபாசம் அனைத்துமே அநித்தியம், ஆசையே அனைத்துத் துன்பங்களுக்கும் மூல காரணம். சுயநலத்தைத் துறப்பதே துறவறம் இல்லையா?''

மேலே ஏதேதோ பேசிக் கொண்டே போனாள் தாருல்தேவி.

ஒன்று மட்டும் நிச்சயமாகப் புரிந்தது. இவள் முடிவைத் தான் மாற்ற முடியுமென்று நம்பியது தவறென்று நன்றாகப் புரிந்தது. நாற்பத்தி எட்டு நாள் 'உப்தியான்' தவ வாழ்க்கை, பிற்காலத் துறவு வாழ்க்கைக்கான பலமான அடித் தளத்தை அமைத்துக் கொடுத் திருந்தது என்பது நன்கு புரிந்து போனது நரேனுக்கு.

குலாபிக்குப் பிடித்தமான அழகான, பெரிய, பிரத்தியேகமாகக் கொண்டு வந்திருந்த ரோஜாவை நீட்டினான் நரேன்.

''மனத்துக்கு மிகவும் பிடித்தமானதை முதலில் துறப்பதுதான் துறவறத்தின் முதல்படி'' என்று விடைபெறுவது போல் கையை மெல்ல உயர்த்தி எழுந்தாள் தாருல்தேவி.

சென்றது நொடிகளா, நிமிடங்களா என்று புலனாகாத நிலை நரேனுக்கு.

கண்களில் படர்ந்த கண்ணீரை மெல்ல விரல்களால் விலக்கிய நரேனுக்கு, தூரத்தே சென்று கொண்டிருந்த, வெண்ணிற ஆடை அணிந்த தாருல்தேவியின் உருவம் புலப்பட் டது. மெல்ல வீசிய காற்றில் கையில் பிடித் திருந்த ரோஜாவின் இதழ்கள் உதிர்ந்தன. உதிர்ந்தது ரோஜாவின் இதழ்கள் மட்டும் தானா? ●





# திடீர் நாயகி!

'ப்ளஸ் டூ' படத்தின் நாயகி சுஜாவின் குடும்பத்திற்கும் சினிமாவிற்கும் ஆறு மாதத்திற்கு முன்புவரை எந்தச் சம்பந்தமும் கிடையாது. "அப்பா ஒரு எலக்ட்ரீஷியன். அவர் வேலைக்குப் போக வசதியா இருக்குமேன்னு ஆறு மாதத்திற்கு முன்புதான் இந்த வீட்டிற்குக் குடி வந்தோம். நான் கோடம்பாக்கம் அரசு உயர்நிலைப் பள்ளியில் ஒன்பதாம் வகுப்பு படிச்சுக்கிட்டு இருந்தேன். ஒளிப்பதிவாளர் ராஜராஜன் அங்கிளுக்குப் பக்கத்து வீடுன்னு எங்களுக்குத் தெரியாது. நான் தினசரி யூனிபார்மில் பள்ளிக்கூடத்துக்குப் போறதையும், தெருப் பிள்ளைகளோடு கண்ணாமூச்சி விளையாடுவதையும் கவனித்துக்கொண்டே இருந்திருக்கிறார். திடீரென்று ஒருநாள் எங்க வீட்டிற்கு வந்து 'ப்ளஸ் டூ என்று ஒரு படம் எடுக்கிறோம். அதுலே கதாநாயகியாக உங்கப் பெண்ணை நடிக்க வைக்க சம்மதமா'ன்னு கேட்டார். அப்பா அவரிடம் சண்டைக்கே போய்விட்டார் எனக்கோ நடிக்கணும்னு ஆசை... அப்புறம் அடம் பிடிச்சேன்... எப்படியாவது ஒழின்னு அப்பா ஓ.கே சொல்லிட்டார்... அவர் பயந்த மாதிரி இல்லே... சினிமாலே நல்லவங்க நிறையப் பேர் இருக்காங்க" என்கிறார் அப்பாவியாக. "என்னை சின்னப்பொண்ணு என்று யாரும் ஏமாற்ற முடியாது; கண்டிப்பாகக் கதை கேட்டுத்தான் நடிப்பேன்" என்று சொல்லும் சுஜா என்கிற சுஜாதாவுக்கு ஸ்ரீதேவி, சிம்ரன், சௌந்தர்யா மாதிரி வர வேண்டும் என்று சின்ன சின்ன ஆசை இருக்கிறது...!

சந்திப்பு: ஸ்ரீசக்கரம்

பொறியியல் கல்லூரியில் படிக்கும் ஐந்து நெருக்கமான நண்பர்கள் (மூன்று ஆண்கள் + இரண்டு பெண்கள்), படிப்பு முடிந்த பிறகும், எஞ்சிய வாழ்நாள் முழுக்க நண்பர்களாகத் தொடர விரும்புகிறார்கள். ஒரு நண்பர் மட்டும் பிரிந்து போய்விடுகிறார். ஆறாவதாய் வந்து சேரும் தோழி அந்த இடத்தை நிரப்புகிறார்.

என்னய்யா இது! யதார்த்தத்தில் ரொம்ப இடிக்கிற கதையாக இருக்கிறதே என்றுதான் எண்ணத் தோன்றும். ஆனால் இந்தக் கதைக்கு யதார்த்தம் இழையோடும் பாத்திரப்படைப்பும், தொய்வில்லாத திரைக்கதையும், பழைய சாயல் இல்லாத காட்சி அமைப்புகளும் அமைந்துவிட்டதில் படம் 'பளிச்'சென்று புதிதாய் இருக்கிறது. முகத்தைக் கூடப் பார்க்காமல் தாலி கட்டிய மாமனுக்காக நம்பிக்கையோடு காத்திருந்து, கடைசி நிமிடத்தில் வெடிக்கும் ஈஸ்வரி (கனிஹா), நண்பனின் மனைவி என்று தெரியாமலேயே உருகி உருகி காதலித்துவிட்டு, தெரிந்த பிறகு குற்ற உணர்ச்சியையும், தோல்வியையும் கலவையாய் தேக்கியபடி, நண்பனைத் தேடி அலையும் பிரபு (பிரசன்னா), அப்பாவின் அடக்குமுறைக்குத் தண்டனை தர நினைத்து, நாட்டைவிட்டே ரகசியமாய் புலம்பெயர்ந்து ஐரோப்பியனாகிவிடும்

● அபவ் ஆவரேஜ்



# ஃபைவ் ஸ்டார்

இளங்கோ (கிருஷ்ணா), உயிரோடு மகனைத் தொலைத்துவிட்டோம் என உணர்ந்து "இப்போல்லாம் நாயைக் கூட நான் திட்டுறதில்லே" என உடையும் மயில்சாமி (விஜயன்) இந்த நான்கு பேரும் பாத்திரத்தை உள்வாங்கிக் கொண்டு நடிப்பில் பிரமாதப்படுத்தியிருக்கிறார்கள்.

பாடல்களில் கலக்கிய பரசுராம் ராதா இசை ஜோடி, காது செவிடாகும் படி மேற்கத்திய வாத்தியங்களை இஷ்டத்திற்கு அலறவிட்டு, பின்னணி இசையில் மண்கோட்டைக் கட்டிவிட்டார்கள்.

கல்லூரி வாழ்க்கையைக் காட்டும் முதல் பதினைந்து நிமிடங்கள், அடிக்கடி ஆட்டம், பாட்டம் என தொண்டியடிக்கிறது. என்றாலும் பைவ் ஸ்டாரில் புதிய சுவை. காரணம் சுசி கணேசனின் பக்குவப்பட்ட இயக்கம்.

— விஷுவல்தாசன்

# மலையேறாத மலேரியா!

அனபோலிஸ் காம்பியா பறந்து வருகிறது. வந்து, உங்கள் உடலில் பிளாஸ் மோடியம் பால்சிபாரத்தைச் செலுத்திவிட்டுப் போய்விடுகிறது. அவ்வளவுதான். ஒரு வாரம், பத்து நாட்களுக்குள் மெல்ல ஆரம்பித்து, கடுமையான குளிர் ஜுரம் உங்களைத் தாக்கும், கை கால்கள் வலுவிழந்து தொய்ந்துவிடும். வியர்த்து வியர்த்து ஜுரம் போலத் தோன்றும். ஆறுமணி நேரத்திற்குள் மறுபடி ஜுரம், பெட்ரோல் விலை மாதிரி இறங்கி, ஏறும். தலையைக் கழற்றி வைத்துவிட்டால் தேவலை என்பது போலத் தலை வலிக்கும். குறைந்தது ஒரு இருபது இருபத்தைந்து நாட்கள் உங்கள் டாக்டர் போராடிய பின்பு, மெல்ல ஒயும்.

என்ன இது? அனபோலி, காம்பியா? வேறொன்றுமில்லை. ஆண்டாண்டுக் காலமாக நம்முடன் உறவாடி, வெகு அற்பமாக மதிக்கப்படும் கொசுதான்! சாதாரணக் கொசு இல்லை. மலேரியாக் கொசுவுக்குத்தான் அந்தப் பெயர்.





ஹெர்கி வாகன் வில்லியம்ஸ் என்னும் மாஸ்வால்ட் மருத்துவமனையின் டாக்டர் 'இதை அத்தனை அற்பமாக நினைக்க வேண்டாம்" என்கிறார். ஒழிக்கப்பட்டு விட்டது என நம்பிய பிறகு, ஐம்பது ஆண்டுகளுக்குப் பின்னர் தென்னாப்பிரிக்காவில் மீண்டும் 1997ல் படு உக்கிரமாகத் தாக்கத் தொடங்கியது மலேரியா. 2000 ஆம் ஆண்டுக்குள் 64,000 பேர் பாதிக்கப்பட்டார்கள். டி.டி.டி (D.D.T) மருந்தை உபயோகிக்கத் தொடங்கி, மற்ற உயிரினங்களும், செடி கொடிகளும் பாதிக்கப்பட்டாலும் பரவாயில்லை என்ற தீர்மானத்திற்கு வந்தபின்பே, கட்டுப்படுத்த முடிந்தது.

பிளாஸ்மோடியம் கிருமிகள் உடலில் நுழைந்ததும், மெல்ல இரைப்பையைத் தேடிப் போகின்றன. சிவப்பு அணுக்களை ஏமாற்றி உள்ளே புகுந்துகொண்டு, ஆண் பெண்ணாகப் பிரிந்து (gamotocytes) கடகடவென்று பெருக ஆரம்பிக்கின்றன.

அனபோலிஸ் காம்பியாவின் ஜீன்களை ஆறு ஆண்டுகள் ஆராய்ச்சி செய்த மால்கம் கார்ட்னர் என்ற ஆராய்ச்சியாளர், "அதன் 5300 ஜீன்களில் அறுபது சதவிதம் எந்த விஞ்ஞானியும் இதுவரை கண்டறியாத முறையில் இருக்கிறது" என்கிறார். இதில் உள்ள 19 மூலப்பொருட்கள் மனித ஜீன்களால் கவரப்படுவதால் இந்தக் கொசுக்கள் மனிதரையே அதிகம் தாக்குகின்றன. பறவைகளும் மிருகங்களும் தாக்கப்பட்டாலும் பாதிக்கப்படுவதில்லை.

இதன் ஜீன்களைப் பற்றி தற்போதைய ஆராய்ச்சி, மலேரியாவை ஒழிக்க சில புதிய வழிகளைக் காட்டும் என்று நம்புகிறார், அந்த ஜீன்களை 'டி-கோட்' செய்த ராபர்ட் ஹால்ட் என்னும் மாலிக் விஞ்ஞானி.

கொலம்பியா யூனிவர்சிடியின் ஜெஃப்ரி சாச், 'உலகம் முழுவதும் மலேரியாவைக் கட்டுப்படுத்த ஆண்டுக்கு இரண்டு பில்லியன் டாலர் செலவாகும். ஆனால் தற்போது இதில் பத்தில் ஒரு பங்கு மட்டுமே செலவழிக்கப்படுகிறது' என்கிறார்.

வால்டர் ரீட் மருத்துவமனையும், 'கிளாஸ்கோ ஸ்மித்கிளின்' தயாரிப்பாளர்களும் தற்போது இன்னும் வலிமையான மருந்தைத் தயார் செய்வதில் முனைந்திருக்கிறார்கள்.

அதுவரை அத்தனை சீக்கிரம் மலையேறி விடாது மலேரியா!

- விஸ்வக்



**கா**விரி டெல்டாவைப் போல, சீரான சமவெளி விவசாய பூமி, உலகில் வேறெங்குமில்லை என்கிறார்கள். கனவுகளையும் களிப்புகளையும் கண்டிருந்த காவிரிப் பாசனப் பகுதி மக்கள் இன்று கண்ணீரில்! மழையை எதிர்பார்த்து வானம் பார்த்துக் காத்திருக்கும் அந்தப் பகுதியில் வலம் வந்தோம்.



கோவை, ஈரோடு, கரூர், திருச்சி, தஞ்சை, நாகை, திருவாரூர் ஆகிய ஒட்டுமொத்த காவிரிப் பாசனப் பகுதியின் மொத்த விளை நிலம் இருபத்தியெட்டு லட்சம் ஏக்கர். இதில் காவிரி டெல்டா விளைநிலம் மட்டும் இருபது லட்சம் ஏக்கர். இவற்றில் ஐந்தில் ஒரு பங்கு விளை நிலத்தில்கூட குறுவைப் பயிர் சாகுபடி செய்யப்படவில்லை. குறுவைக்கு அடுத்து வரும் சம்பா சாகுபடியும் 'அம்போ' ஆகி விடுமோ என்கிற அச்சம் கலந்த துயரம், காவிரி டெல்டா பகுதி விவசாயிகள் அனைவர் மனத்திலும் நிறைந்துள்ளது.

காவிரி டெல்டா பகுதியான தஞ்சை - நாகை - திருவாரூர் மாவட்டங்களில் சம்பா பயிருக்கென, பதினாறு லட்சம் ஏக்கர் வயல் நிலம் வெறும் கட்டாந்தரை போலக் காட்சியளிக்கின்றது. மிக மிக சொற்ப விவசாயிகள் மட்டுமே நிலத்தடி நீரை நம்பி சம்பாவுக்கென நாற்று நட்டிருக்கிறார்கள். வடுவூர், மன்னார்குடி, திருவாரூர், வேலுக்குடி, லெட்சுமாங்குடி, அம்மையப்பன், நீடாமங்கலம், கொரடாச்சேரி போன்ற பகுதிகளில் சம்பா நாற்று நட்டு மேலும் தண்ணீரை எதிர்நோக்கி காத்திருக்கிறார்கள். பெரும்பாலான விவசாயிகள் சம்பா பயிருக்கான எந்தவொரு முயற்சியிலும் இறங்க முடியாமல் தவித்துப் போயுள்ளனர். பொதுவாக சம்பா பயிர் என்பது அக்டோபர்

# காவிரி டெல்டா: கருகம்

முதல் வாரத்தில் நாற்று நடப்பட்டுப் பதினைந்து தேதிக்குப் பிறகு நடவு நட்டிருக்க வேண்டும்.

**இ**ந்த வறட்சியில் தென்னை மரங்கள் கூடக் கருகிப் போயுள்ளன. நிலத்தடி நீர் வற்றிப் போய், திருச்சி மாவட்டத்தில் பெரும்பாலான தென்னை மரங்கள் காய்ந்து கருகிப் போய்விட்டன. ஆயிரம் தென்னை மரங்கள் கொண்ட தோப்பு ஒன்றில் அத்தனையும் கருகிப் போயுள்ளன. நூற்றைம்பது அடிக்குக் கீழே பைப் இறக்கியும் தண்ணீர் வரவில்லை என்கிறார் அந்த விவசாயி. சாதாரணமாக முப்பது அடியில் தண்ணீர் வந்த பகுதி அது.

கரூர் மாவட்டம், பள்ளப்பட்டி கிராமத்தில் பயிரிடப்பட்ட கரும்புப் பயிர்கள் காய்ந்து போய்விட்டன. எலுமிச்சை மரங்கள்கூடத் தப்பவில்லை என்கிறார் ஒருவர். மணப்பாறை தாலுக்கா பண்ணைப்பட்டிக் கிராமத்தில் ஒருவரது எலுமிச்சைத் தோட்டம் முழுவதும் கருகிப் போயுள்ளது.



• வி. ராஜாராம்



• கனகசபை

# பூமி!

ஒட்டு மொத்தமாக நெல், வாழை, கரும்பு, தென்னை, மா என அனைத்தையும் 'காவு' செய்துள்ளது இக்கடும் வறட்சி.

**க**டந்த நான்கு மாதங்களில் (ஜூன், ஜூலை, ஆகஸ்ட், செப்டம்பர்) கர்நாடகாவிலிருந்து தமிழகத்துக்கு, காவிரி நடுவர் மன்ற ஆணையின்படி வந்திருக்க வேண்டிய தண்ணீரில் எழுபத்தைந்து டி.எம்.சி. தண்ணீர் இன்னும் வந்தபாடில்லை. அந்தந்த மாத அளவுகளின்படி மேற்குறிப்பிட்ட அளவு தண்ணீர் மேட்டூர் அணைக்கு வந்திருக்குமேயானால், தமிழகக் காவிரி டெல்டா பகுதிகளில் பெரும்பான்மை நிலங்களில், குறுவைப் பயிரிட்டு, அறுவடை முடிந்து, இந்நேரம் சம்பாவுக்கும் தயார் ஆகி இருக்கலாம்.

தற்போது மேட்டூரில் நீர் மட்ட அளவு முப்பத்தைந்து அடி. இதில் பயன்படா நீரின் கையிருப்பு அளவு இருபத்தைந்து அடி. மீதமுள்ள தண்ணீர் இன்னும் ஒரு வாரத்துக்கு வருமா என்பது சந்தேகமே. ஆனால், கர்நாடக முதல்வர் எஸ்.எம்.கிருஷ்ணா முன்பு டெல்லியில், செப்டெம்பர் நான்கு முதல் அக்டோபர் இறுதிவரைக்கும் தினசரி வினாடிக்கு எட்டாயிரம் கன அடி தண்ணீர் மேட்டூர் அணைக்கு, கிருஷ்ணராஜ சாகரிலிருந்து திறந்து விடுவதாக உறுதி கூறியிருந்தார். ஏனோ மறுநாளே, தமிழகத்துக்கு ஒரு சொட்டுத் தண்ணீர்கூட தர முடியாதென பிடிவாதமாக மறுத்துவிட்டார். அவர் தருவதாகச் சொல்லியிருந்த எட்டாயிரம் கன அடி (தினசரி வினாடிக்கு) தண்ணீர் திறந்து விட்டிருந்தால்கூட, இந்நேரம் காவிரி டெல்டா பகுதிகளில் சம்பாப் பயிர் நடுவதற்கான பணிகள் மும்முரமாக நடந்து கொண்டிருக்கும்.

தென் மேற்குப் பருவ மழை பொய்த்துப் போனதும் இந்த வறட்சிக்கு ஒரு காரணமென, விபரம் தெரிந்தவர்கள் சொல்கிறார்கள். மே மாத இறுதியில் ஆரம்பித்து, ஆகஸ்ட் மாத இறுதி வரை பெய்திருக்க வேண்டிய இப் பருவ மழை போதிய அளவு பெய்யவில்லை. இது இந்தியா முழுமைக்கும் சாதகமாகப் பெய்யும் மழை.

வடகிழக்குப் பருவமழை என்பது செப்டெம்பர் இறுதியில் துவங்கி நவம்பர் இறுதிவரைக்கும் பெய்யக் கூடியது. இது தமிழகத்துக்கு மட்டுமே மிகவும் சாதகமான மழையாகக் கருதப்படுகின்றது. இப்பொழுது காவிரி டெல்டா விவசாயிகள் கர்நாடகத் தண்ணீருடன், வடகிழக்குப் பருவ மழையினையும் பெரிதும் நம்பி எதிர்பார்த்துள்ளனர்.

விவசாயப் பயன்பாடுகளுக்குப் போதுமான தண்ணீரின்றி, தஞ்சை - நாகை - திருவாரூர் மாவட்டங்களில் காய்ந்து போயுள்ளது அங்குள்ள வயல்வெளிகள் மட்டுமல்ல. பசுக்களும், காளை மாடுகளும் தங்களுக்கு அதிமுக்கியக் கால்நடைத் தீவனமான வைக்கோல் கிடைக்காமல் எலும்பும் தோலுமாகக் காட்சியளிக்கின்றன. விளைவு, கடந்த ஒரு மாதத்தில் மட்டும் இப்பகுதிகளிலிருந்து சுமார் முப்பதாயிரம் கால்நடைகள் கேரளாவுக்கு இறைச்சிக்கென கொண்டு செல்லப்பட்டிருக்கிறது.



"இடைக்கால ஒப்பந்தத்தின் அடிப்படையில், தண்ணீருக்காக மிகவும் சிரமப்படும் காலங்களில், பாசன நீரை இரு மாநில அரசுகளும் இணைந்து பகிர்ந்து கொள்ள வேண்டுமென்பது விதி. ஆனால் இன்றைய சூழ்நிலையில், கர்நாடகத்தின் நான்கு அணைகளிலும் போதுமான அளவு தண்ணீர் இருந்தும், கிருஷ்ணராஜ சாகர் அணையிலிருந்து மேட்டூர் அணைக்குத் தண்ணீர் திறந்து விட கர்நாடக அரசு மறுத்து வருவது ஒப்பந்தத்திற்கு முற்றிலும் எதிரானது. கர்நாடகாவில் முன்பிருந்ததைவிட பாசனப் பகுதிகளை மிக அதிகமாக விஸ்தரிப்பும் செய்து விட்டார்கள். ஆனால் தமிழகத்தின் காவிரி டெல்டா பாசனப் பகுதிகளின் பரப்பளவு ஒவ்வொரு ஆண்டும் குறைந்து வருகிறது. ஒப்பந்தப்படியும் சரி, உச்சநீதி மன்றத் தீர்ப்பின் படியும் சரி, தமிழகத்துக்கு உண்டான தண்ணீரை கர்நாடகா உடனடியாகத் திறந்து விட வேண்டும். அப்பொழுதுதான் காவிரி டெல்டா பாசனப் பகுதிகளைக் காப்பாற்ற முடியும்!" என்கிறார் திருச்சி மாவட்டக் காவிரி டெல்டா விவசாயிகள் சங்கத் தலைவர் லால்குடி ஜி. கனகசபை.

"காவிரித் தண்ணீருக்காக கர்நாடகாவுடன் பல்லாண்டுகளாகப் போராடி வருகிறோம். பருவ மழை பொய்த்துப் போகும் வருடங்களில் ஓங்கிக் குரல் கொடுப்பது நமது வழக்கமாகிவிடுகிறது. நம் தேவைக்கு அதிகமாக சர்க்கரையை உற்பத்தி செய்துவிட்டு தவித்துக் கொண்டிருக்கிறோம். வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்ய முடியாமல் திணறுகிறோம். சர்வதேச சந்தையில் சர்க்கரை விலை, இந்திய சர்க்கரை உற்பத்திச் செலவை விட குறைவாக உள்ளதால், கரும்பு விவசாயிகளுக்குச் சரியான விலையும் தர முடியாமல், கூட்டுறவு சர்க்கரை ஆலைகள் ஆயிரமாயிரம் கோடி ரூபாய் நஷ்டத்தில் மூடப்படும் நிலையில் உள்ளது. இதற்கு மாற்றாக பாமாயில் மரக்கன்றுகளை காவிரி டெல்டாவில் பயிரிடலாம். அதன் மூலம் ஆறாயிரம் கோடி ரூபாய் அன்னியச் செலவாணியை நாம் மிச்சப்படுத்தலாம். வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யும் நிலை மாறி, உள் நாட்டிலேயே பாமாயிலை விற்பனை செய்யலாம். பாமாயில் மரத்திற்கு நெல் அளவு தண்ணீர் தேவை இல்லை. விவசாயிகளுக்கும் இது நல்லது. இதுபோன்ற புதிய திட்டங்களை வடிவமைப்பதன் மூலமாக, காவிரிக்கு கர்நாடகாவிலிருந்து வரும் தண்ணீர் குறைந்தாலும் தமிழக காவிரி டெல்டா விவசாயிகளின் எதிர்காலத்துக்கு வழி காட்டலாம்!" என்கிறார் திருச்சி மாவட்டக் காவிரிப் பாசன விவசாயிகள் சங்கத் துணைத் தலைவர் மகாதானபுரம் வி.ராஜாராம்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

✉ காஷ்மீர் தேர்தலில் தீவிரவாதத்தையும் மிஞ்சி ஜனநாயகம் வெற்றி பெற்றதைச் சித்தரித்த முதல் கார்ட்டூன் ஏக பொருத்தம்.
கும்பகோணம், புலவர் எஸ்கே. மூர்த்தி.

✉ தமது உயிரையும் துச்சமாக நினைத்து அக்ஷர்தாம் கோயிலில் ஆபரேஷனை வெற்றிகரமாக நடத்தியிருக்கும் தமிழர் ராஜ்சீதாபதிக்குச் 'சாகச'பதி பட்டம் பொருத்தமானது. சபாஷ்பதி.
திருவாரூர், எஸ். பாலசந்தர்.

✉ நசுக்கப்பட்டு வரும் விவசாயிகளின் மேல் மத்திய அரசுக்கு உண்மையான அக்கறை இருந்தால், ஆண்டு முழுவதும் அவர்கள் வேலை வாய்ப்பு பெறும் வகையில் கிராமங்களைச் சுற்றி விவசாயம் சார்ந்த தொழில்கள் பெருக வழி செய்ய வேண்டும், என்ற வரிகளில் ஆசிரியரின் உண்மையான ஆதங்கம் வெளிப்பட்டிருந்தது. இந்த அருமையான யோசனைக்கு மத்திய அரசு செவி சாய்த்தால் மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும்.
திருவாரூர்-1, பாலநாதன்.



தாய்த்தமிழ்
தொடக்கப்பள்ளி,
சங்கரன்கோவில்,
திருநெல்வேலி




# சபாஷ்பதி!

✉ தங்களின் நேர்மையான, உண்மையான, தேசிய உணர்வுள்ள தலையங்கங்களை பல்லாண்டு காலமாகப் படித்து வருபவன் நான். காந்தி கண்ட 'கிராமப் பொருளாதாரத் திட்டத்தையும் குறிப்பெடுத்து, வாஜ்பாய் அரசு நிறைவேற்றினால் நன்மை பயக்கும் என்று சுட்டிக் காட்டி இருக்கிறீர்கள். காந்தி மீது அபிமானம் இல்லாத ஆர்.எஸ்.எஸ். இது குறித்துப் பேசியது தற்செயலான விஷயம் (an accident) ஒரு குடம் விஷத்தில் ஒரு துளி பாலைக் கலக்கியிருக்கிறார்கள். அவ்வளவே, எவ்வளவோ தேச பக்தர்கள், நேர்மையாளர்கள், டாக்டர் உதய மூர்த்தி போன்ற உண்மையாளர்கள் இது பற்றி அடிக்கடிப் பேசி வருகிறார்கள். GATT ஒப்பந்தம் சமயத்தில் நன்மை தீமைகளை அலசி காந்திய கிராமப் பொருளாதாரம் குறித்தும் நீங்கள் எழுதியிருக்கிறீர்கள்!
சென்னை - 92, கிருஷ்ண. ராஜ்கோபால்.

✉ 'சிப்பை ஒளித்து வைத்தால் கல்யாணத்தை நிறுத்தி விட முடியுமா?' பத்திரிகை நிருபரைப் பழி வாங்கி விட்டால், பத்திரிகைகளில் வெளியாகும் செய்திகளை நிறுத்தி விட முடியுமா, என்ன?
திருச்சி, ஆர். சலாம்.

✉ நமக்கு இப்படி ஒரு கல்வி கற்க கொடுத்து வைக்கவில்லையே! நம் குழந்தைகளும் கல்வி எனும் பெயரில் எதையோ இழந்து வருகின்றனர் என வருத்தமுற வைத்துவிட்டது, சங்கரன்கோவிலில் இயங்கி வரும் தாய்த் தமிழ்ப் பள்ளி பற்றிய கட்டுரை.
சென்னை - 26, சி. மகேஷ்.

# சிவகாமியின் சபதம்



பதினைந்தாம் அத்தியாயம்

## "நமனை அஞ்சோம்!"

வேலனின் காதலி நீலமயில் ஒன்றை வளர்த்து வருகிறாள். அந்த மயிலைப் பார்க்கும்போதெல்லாம் அவளுக்கு முருகனுடைய நினைவு வருகிறது. காதலின் தாபம் அதிகமாகிறது. ஒருநாள் மயிலைப் பார்த்துச் சொல்கிறாள்:- "நீ பெருமான் முருகனுடைய வாகனமல்லவா? போ! போய் அவரை இங்கு விரைவில் அழைத்து வா!'' என்று கட்டளையிடுகிறாள். கட்டளையிடுவதுடன் நிற்காமல் மயிலை அடிப்பதாக பயமுறுத்தி விரட்டி விடுகிறாள்.

நீலமயில் விரைவில் திரும்பி வரும் என்றும், வரும்போது, தன் மீது வேலனை ஏற்றிக் கொண்டு ஆடி வருமென்றும் காதலி வழிபார்த்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் நெடுநேரம் காத்திருந்தும் மயிலையும் காணவில்லை; வேலனையும் காணவில்லை.

''வேலன் ஒருவேளை அடியோடு தன்னை மறந்து விட்டிருப்பாரோ?'' என்று ஒருகணம் தோன்றுகிறது.

உடனே அந்த பழைய சம்பவம் ஞாபகத்துக்கு வருகிறது. கடைசித் தடவை வேலனை அவள் சந்தித்த போது, "என்னை மறந்துவிடக் கூடாது" என்று தான் இரந்து கேட்டுக் கொண்டதும், அவர் தம் வேலின் மேல் ஆணையாக ''உன்னை ஒருநாளும் மறக்க மாட்டேன்!'' என்று வாக்களித்ததும் நினைவுக்கு வருகின்றன. உடனே, "இல்லை; அவர் ஒருநாளும் மறந்திருக்க மாட்டார். இந்த மயில்தான் தாமதம் செய்கிறது'' என்று தீர்

அமரர் கல்கி

மானித்துக்கொள்கிறாள்.

தன் மனக் கண்ணின் முன்னால் மயிலை உருவகப்படுத்தி நிறுத்திக் கொண்டு சொல்கிறாள்.

**"மறவேன் மறவேன் என்று**
**வேலின்மேல்ஆணையிட்ட**
**மன்னரும் மறப்பாரோ நீல**
**மயிலே!"**

என்று சிவகாமி பாடிக்கொண்டு அபிநயமும் பிடித்தபோது, சபையோரின் கண் முன்னாலிருந்து சிவகாமி மறைந்து விட்டாள். தமிழகத்தின் அதிதெய்வமான ஸ்ரீ சுப்ரமண்யர் கையில் வேலுடனே அவர்கள் கண் முன்னால் நின்றார். கருணையும் அன்பும் ததும்பிய கண்களினால் முருகப் பெருமான் தன்னிடம் காதல் கொண்ட பெண்ணை நோக்குவதையும், கையில் பிடித்த வேலின் மேல் ஆணை வைப்பதையும், 'உன்னை என்றும் மறவேன்!' என்று உறுதி கூறுவதையும் சபையோர் பிரத்தியட்சமாய்க் கண்டார்கள்.

அடுத்த கணத்தில் 'வேலனும் வேலும் மறைய, வேலனைப் பிரிந்த காதலியையும் நீல மயிலையும் சபையோர்கள் தங்கள் எதிரே பார்த்தார்கள். காதலியின் உயிர் வேலனைப் பிரிந்திருக்கும் ஆற்றாமையினால் உருகிக் கரைவதையும் அவர்கள் கண்டார்கள்.

**"அன்பர் வரவுநோக்கி**
**இங்கு நான் காத்திருக்க**
**அன்னநடை பயில்வாயோ**
**வண்ண மயிலே!"**

என்னும் அடிக்குச் சிவகாமி அபிநயம் பிடித்தபோது, முதலிலே தன்னந்தனியான ஒரு பெண், கண்களில் அளவற்ற ஆசையுடனும், ஆர்வத்துடனும், முடிவில்லாமல் நீண்டு சென்ற வழியைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள்.



றகு, அந்தப் பெண், அன்ன நடை பயிலும் வண்ண மயிலைப் பரிகசிப்பதற்காகத் தானும் அன்ன நடை நடந்து காட்டியபோது, சபையில் 'கலீர்' என்ற சிரிப்பு உண்டாயிற்று. அவ்விதமே, முருகன் தன்னை வாகனமாய்க் கொண்ட பெருமிதத்தினால் மயிலின் தலைக்கேறிய போதையைக் காட்டியபோதும், அதனால் மயில் பாதையை மறந்து திண்டாடிய பேதைத்தனத்தைக் குறிப்பிட்டபோதும் சபையில் ஒரே குதூகலமாயிருந்தது.

"ஒருவேளை என் மேல் பழி தீர்த்துக் கொள்வதற்காக வழியில் வேணுமென்று படுத்து உறங்கி விட்டாயா?" என்று மயிலைப் பார்த்துக் கேட்டுவிட்டு, அப்பேர்ப்பட்ட அநியாயத்தைச் செய்த மயிலை, "என்னவோ, நீ எப்படியாவது சௌக்கியமாயிரு!" என்று மனங்கசந்து ஆசீர்வதிப்பதற்கு அறிகுறியாக, "வாழி நீ மயிலே!" என்று வாழ்த்தி, அதற்குரிய பாவமும் காட்டியபோது, அந்தச் சபையில் ஏற்பட்ட ஆரவாரத்தைச் சொல்லி முடியாது.

மறுகணத்தில் காதலியின் உள்ளப்பாடு மாறுகிறது. "தங்க மயிலே!" என்று கொஞ்சி அழைத்து, இந்த மங்கை மீதிரங்க மாட்டாயா?" என்று கெஞ்சுகிறாள். "உனக்காகவும் தெரியாது; சொன்னாலும் நீ கேட்க மாட்டாய்! உன்னைக் குற்றம் சொல்லி என்ன பயன்? ஏ! வன் கண் மயிலே!" என்று மயிலின் கொடுமையான கண்களின் சலனப் பார்வையைச் சிவகாமி காட்டியபோது, சபையோர் அதிசயத்தில் மூழ்கினார்கள்."

"உன்னை நொந்து பயனில்லை. உலகத்தில் யானைகள், குதிரைகள் என்பதாக எத்தனையோ நல்ல நல்ல பிராணிகள் இருக்க, உன்னைப் போய் வாகனமாய்ப் பிடித்தானே அவனையல்லவா நோக வேண்டும்?" என்று பாட்டை முடிக்கும்போது, அதில் அடங்கியிருந்த சோகம், மனக் கசப்பு, பரிகாசம், நகைச்சுவை ஆகிய உள்ளப்பாடுகள் அவ்வளவையும் சேர்ந்தாற்போல் முகத்தில் காட்டிய சிவகாமியின் அற்புதக் கலைத்திறமை

சபையோரைப் பரவசப்படுத்தியது.

ஆம்; மேற்கூறிய பாடலும் அபிநயமும் சபையில் எல்லோரையும் பரவசப் படுத்தத்தான் செய்தன - ஒரே ஒருவரைத் தவிர, அந்த ஒருவர் மகேந்திர பல்லவர்தான். அவர் முகத்தில்



சிணுக்கம் காணப்பட்டது. வேலனிடம் காதலை வெளியிடும் வியாஜ்யத்தில் சிவகாமி மாமல்லரிடம் தன்னுடைய மனம் ஈடுபட்டதையும் தெரிவிக்கிறாள் போலும். 'வேலின் மேல் ஆணையிட்ட மன்னர்' என்பதில், அடங்கிய சிலேடை மிகத் தெளிவாக மகேந்திரருக்கு விளங்கியது. 'தன்னிகரில்லாதான்' என்னும்போது சிவகாமி தம்மைப் பார்த்ததின் கருத்தையும் தெரிந்து கொண்டார். ஆகா! இந்த பெண்ணுக் குத்தான் என்ன தைரியம்! தம்மைத் தோத்திரம் செய்து அவளுடைய காரியத்தைச் சாதித்துக் கொள்ள எண்ணுகிறாள், போலும்! ஆகா! மகேந் திர பல்லவனுடைய இயல்பை இவள் இன்னும் அறிந்துகொள்ளவில்லை!

இவ்விதம் எண்ணமிட்ட சக்கர வர்த்தி. அருகிலிருந்த ஏவலாளனிடம் ஏதோ சொல்லி அனுப்பினார். அவன் போய் ஆயனர் காதோடு ஏதோ கூறினான். ஆயனர் சிவகாமியிடம், "அம்மா! வாகீசப் பெருமானின் பதிகம் ஒன்று பாடு!'' என்று கூறினார்.

ஏற்கெனவே, சக்கரவர்த்தியின் சிணுங்கிய முகத்திலிருந்து அவருடைய மனப்பாங்கைச் சிவகாமி ஒருவாறு தெரிந்துகொண்டிருந்தாள். அவர் சொல்லி அனுப்பிய செய்தியினால் அது ஊர்ஜிதமாயிற்று. அந்தக் கல் நெஞ்சரைத் தன்னுடைய கலையின் மூலம் இளகச் செய்து, அவருடைய ஆதரவைப் பெறலாம் என்று எண்ணிய தன்னுடைய பிசகை நினைக்க அவளுக்கு வெட்கமாயிருந்தது. அந்த வெட்கமே மறுகணம் கோபமாக மாறி அவள் உள்ளத்தில் கொந்தளித்தது. பின்வரும் பாடலை ஆரம்பித்தாள்: -

''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்...!''

அதுவரையில் ஒரே ஆனந்தத்திலும் குதூகலத்திலும் ஆழ்ந்திருந்த அந்தச் சபையில் திடீரென்று ஒரு மாறுதல் உண்டாயிற்று. ஒரு கல்யாண வைபவத்தின்போது, எதிர்பாராத அபசகுனம் ஏதேனும் ஏற்பட்டால் எல்லாருடைய மனமும் முகமும் எப்படி மாறுமோ அப்படிப்பட்ட மாறுதல். 'இந்தப் பாட்டை இந்தச்



சந்தர்ப்பத்தில் ஏன் பாட வேண்டும்' என்று அத்தனை பேரும் எண்ணியதாக அவர்களுடைய முகக் குறியிலிருந்து தெரிந்தது.

மேற்படி பாடலின் சரித்திரம் அத்தகையதாகும். சமண சமயத்தைத் தழுவிய மருள்நீக்கியார் மீது பாடலிபுரத்துச் சமணர்கள் பற்பல குற்றங்களைச் சுமத்திக் காஞ்சிப் பல்லவ சக்கரவர்த்திக்கு விண்ணப்பம் செய்துகொள்ள, மகேந்திர பல்லவர் உண்மையை விசாரித்து உணரும் பொருட்டு அவரைக் காஞ்சிக்கு வரும்படி கட்டளை அனுப்பினார். கட்டளையைக் கொண்டு போன இராஜ தூதர்கள் அந்த மகா புருஷரைக் கொஞ்சம் அச்சுறுத்தினார்கள்.

"எனக்கு இறைவன், சிவபெருமான் தான்; உங்களுடைய அரசன் கட்டளையை நான் மதியேன்!" என்று திருநாவுக்கரசர் கூறித் தூதர்களைத் திடுக்கிடச் செய்தார்.

"உம்மைச் சுண்ணாம்புக் காளவாயில் போடுவோம், யானையின் காலால் மிதிக்கச் செய்வோம்; கழுத்திலே கல்லைக் கட்டிக் கடலிலே போடுவோம்" என்றெல்லாம் தூதர்கள் பயமுறுத்தினார்கள். அப்போது, மருள்நீக்கியார் ஒரு பாடலைப் பாடினார்:-

**நாமார்க்குங் குடியல்லோம்**
**நமனை யஞ்சோம்**
**நரகத்தி லிடர்ப்படோம்**
**நடலை யில்லோம்**
**ஏமாப்போம் பிணியறியோம்**
**பணிவோ மல்லோம்**
**இன்பமே எந்நாளுந்**
**துன்பமில்லை!**
**தாமார்க்குங் குடியல்லாத்**
**தன்மை யான**
**சங்கரனற் சங்கவெண்**
**குழையோர் காதில்**
**கோமாற்கே நாமென்று**
**மீளா வாளாய்க்**
**கொய்மலர்ச்சே வடியிணையே**
**குறுகினோமே!**

மேற்கண்ட பாடலை ஓலையிலே எழுதுவித்து, "இதை எடுத்துக்கொண்டு போய் உங்கள் அரசரிடம் கொடுங்கள்" என்றார் சிவனடியார். தூதர்களும் தங்களுக்கு வேறு கட்டளையில்லாமையால் திரும்பிச் சென்று பாடலைச் சக்கரவர்த்தியிடம் கொடுத்தார்கள். அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாகக் காரியம் நடந்தது. அதாவது பாடலைப் படித்த மகேந்திர பல்லவர் அத்தகைய தெய்வப் பாடலைப் பாடக்கூடிய மகானைத் தரிசிக்க விரும்பினார். அவரைத் தரிசித்த பிறகு, தாமும் ஜைன மதத்தைவிட்டுச் சைவ சமயத்தைச் சேர்ந்தார்.

இதெல்லாம் தெரிந்தவர்களான படியாலேதான் சபையோர் அத்தகைய அஸ்வாரஸ்யத்தைக் காட்டினார்கள்.

ஆனால், சபையோருடைய மனோபாவத்துக்கு நேர்மாறாக இருந்தது மகேந்திர பல்லவருடைய மனோபாவம். அந்தப் பாடல் அவருக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்ததாகத் தெரிந்தது. பாடல் ஆரம்பித்த உடனே, அது எந்தச் சந்தர்ப்பத்தில் பாடப்பட்டதென்பதை மகேந்திரர் புலிகேசிக்கு அறிவித்தார். புலிகேசிக்கு அது எல்லையற்ற வியப்பையும் உவகையையும் அளித்ததாகத் தெரிந்தது. "அழகுதான்! தங்களுடைய அதிகாரத்தை மறுதலித்து ஒரு பரதேசி பாடல் பாடுவது; அதை ஒரு பெண், சபை நடுவில் நின்று அபிநயம் பிடிப்பது; அதை நீங்களும் பார்த்துச் சந்தோஷப்படுவது; இதையெல்லாம் என்னால் நம்பவே முடியவில்லையே!" என்றார் வாதாபிச் சக்கரவர்த்தி.

"அதுதான் கலையின் மகிமை, சத்யாச்ரயா! ஒருவன் வாய்ப் பேச்சாக என் ஆக்ஞையை மறுத்திருந்தால், உடனே அவனைச் சிரச்சேதம்

செய்யும்படி கட்டளையிட்டிருப்பேன். அதுவே செந்தமிழ்க் கவிதையாக வந்தபோது, "இத்தகைய அற்புதக் கவிதையைப் பாடியவரைப் பார்க்க வேண்டும்' என்ற விருப்பம் எனக்கு உண்டாகிவிட்டது'' என்றார் ரஸிக சிகாமணியான காஞ்சிச் சக்கரவர்த்தி.

இதற்குள்ளாகப் பாடல் ஒரு தடவை பாடி முடிந்து, அபிநயமும் ஆரம்பமாகியிருந்தது. 'நமனை அஞ்சோம்' என்னும் பகுதிக்குச் சிவகாமி அபிநயம் பிடிக்கத் தொடங்கியிருந்தாள். மார்க்கண்டனுடைய கதை சபையோரின் கண்முன்னால் வந்தது.

மல்லிகைப் பூவின் மெல்லிய இதழ் போன்ற மிருதுவான சரீரத்தையுடைய அந்த யுவதி ஒரு கணத்தில் கையிலே தண்டாயுதத்துடனும் பாசக் கயிற்றுடனும் கண்டவர்கள் உயிர்க் குலையும் பயங்கரத் தோற்றத்துடன் வரும் யமதர்மராஜனாக மாறுகிறாள்! அடுத்தகணத்தில் அவளே பதினாறு வயதுள்ள இளம் பாலகனாக மாறி, முகத்தில் சொல்ல முடியாத பீதியுடன், சிவலிங்கத்தை அணைத்து ஆலிங்கனம் செய்து கொள்ளுகிறாள்.

மறுகணத்தில் யமதர்மராஜன் தன் பாசக் கயிற்றை வீசி எறிந்து மார்க்கண்டனுடைய உயிரை வலிந்து கவரப் பார்க்கிறான். அந்த இளம் பிள்ளையின் முகமோ முன்னைக் காட்டிலும் பதின் மடங்கு பீதியையும் பரிதாபத்தையும் காட்டுகிறது.

ஆஹா! அடுத்தகணத்தில் அந்தச் சிவலிங்கத்திலிருந்து சம்ஹார ருத்ர மூர்த்தி கிளம்புகிறார்! சிவகாமியின் நெடிதுயர்ந்த ஆகிருதி இப்போது இன்னும் உயர்ந்து தோற்றமளிக்கிறது. ஒரு கணம் கருணை ததும்பிய கண்கள் சற்று கீழ் நோக்கிப் பார்க்கின்றன. கரங்கள், பாலன் மார்க்கண்டனுக்கு அபயம் அளிக்கின்றன. மறுகணத்தில் கண்கள் எதிர்ப்புறம் நோக்குகின்றன. யமனைக் கோபத்துடனே பார்க்கும் கண்களில் அக்னி ஜுவாலை தழல் விடுகிறது. புருவங்களுக்கு மத்தியிலே நெற்றிக் கண் இதோ திறந்துவிடப் போகிறது என்று நினைக்கும்படியாக ஒரு துடிதுடிப்புக் காணப்படுகிறது.

கோர பயங்கர உருவங் கொண்ட யமதர்மனிடம் இப்போது சிறிது பணிவைக் காண்கிறோம். "என் பேரில் ஏன் கோபம்? என்னுடைய கடமையைத்தானே செய்கிறேன்?'' என்று சொல்லும் தோற்றம். கோபம் கொண்ட சம்ஹார ருத்ரமூர்த்தி மீண்டும் சபையோருக்குத் தரிசனம் தருகிறார். 'தடார்' என்ற சத்தத்துடன் யமன் உதைபட்டுக் கீழே விழுகிறான்.

மீண்டும், பாலன் மார்க்கண்டனின் பால் வடியும் முகம். ஆகா! அந்த முகத்தில் இப்போது பயம் இல்லை, பீதி இல்லை! பக்திப் பரவசமும் நன்றியும் ததும்புகின்றன.

அபிநயம் ஆரம்பித்தவுடனேயே சபையோர் தங்களுடைய பழைய விரஸ உணர்ச்சியை மறந்துவிட்டார்கள். பாட்டு யார் பாடியது; எந்தச் சந்தர்ப்பத்தில் பாடியது என்பதெல்லாம் அவர்களுக்கு அடியோடு மறந்துபோய்விட்டது. வெளியுலகத்தை மறந்து, தங்களையும் அடியோடு மறந்துவிட்டார்கள்.

பாடல் முழுவதும் முடிந்து, பூலோகத்திற்கு வந்தவுடனே "எப்படி?'' என்று மகேந்திர பல்லவர் புலிகேசியைக் கேட்டார்.

"நாகநந்தி எழுதியது உண்மைதான்!'' என்று வாதாபி மன்னர் சொல்லிவிட்டு மகேந்திர பல்லவரை உற்று நோக்கினார். மகேந்திரரின் முகத்தில் எவ்வித மாறுதலும் காணப்படவில்லை.

''நாகநந்தி யார்?'' என்று சாவதானமாக மகேந்திரர் கேட்டார்.

'நீங்கள் நாகநந்தி பெயரைக் கேள்விப்பட்டதே இல்லையா? தென்னாடெங்கும் பலநாள் யாத்திரை செய்த

## அருள்வாக்கு



நம் கோபம் எதிராளியை மாற்றாது. அவனுக்கு நம்மிடம் கோபத்தை உண்டாக்குவதுதான் அதன் பலன். இரண்டு பக்கங்களிலும் துவேஷம் வளர்ந்துகொண்டே போகும். ஒருத்தன் தன் தப்பைத் தானே உணர்ந்து திருந்தச் செய்யாமல், நம் கோபத்துக்குப் பயந்து சரியாக நடந்து காட்டுவதில் நமக்குப் பெருமையில்லை. இது நிலைத்தும் நிற்காது. அன்பினாலேயே பிறரை மாற்றுவதுதான் நமக்குப் பெருமை. அதுதான் நிலைத்து நிற்கும்.

ஒருத்தன் பாபம் செய்ய அவனுடைய மனசு, சந்தர்ப்பம் இரண்டும் காரணமாகின்றன. நாம் பல பாபங்களைச் செய்ய முடியாமல் சந்தர்ப்பமே நம்மைக் கட்டிப் போட்டிருக்கலாம். எனவே, ஒரு பாபியைப் பார்க்கும்போது, ''அம்பிகே! இந்தப் பாபத்தை நானும் கூடச் செய்திருக்கலாம். ஆனால் அதற்குச் சந்தர்ப்பம் தராமல் நீ கிருபை செய்தாய். அந்தக் கிருபையை இவனுக்கும் செய்யம்மா'' என்று பிரார்த்திக்க வேண்டும்.

இரண்டாவதாக, நம்மை ஒருத்தர் துவேஷிக்கிறார் என்றும் கோபம் கொள்ள வேண்டியதில்லை. நாம் எத்தனை தூஷணைக்குத் தக்கவர் என்பது நம் உள் மனசுக்குத் தெரியும். ஒருக்கால் நம்மைத் துஷிக்கிறவர் நாம் செய்யாத தவறுக்காக நம்மைத் திட்டிக்கொண்டிருக்கலாம். ஆனால் நாம் செய்த தவறுகள் அதைவிடப் பெரியவை என்று நம் அந்தரங்கத்துக்குத் தெரியும். நம் தவறுகளைக் கழுவிக் கொள்வதற்காக ஒவ்வொரு நாளும் அம்பாளிடம் பச்சாதாபத்துடன் அழ வேண்டிய நிலையில் உள்ள நாம் பிறரைத் தப்புக் கண்டுபிடித்துக் கோபிக்க நியாயம் ஏது?

நாம் தப்பே செய்யவில்லை என்றால், அப்போது பிறரைக் கோபிக்கலாமா என்றால், இப்படித் தப்பே பண்ணாத நிலையில் நான் அன்புமயமாகி விடுவோம். அப்போது நமக்குப் பாவியிடமும் கருணை தவிர வேறு எந்த பாவனையும் இராது. கோபம் உண்டாகாது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்

---

புத்த பிக்ஷு!''

''பிக்ஷு என்ன எழுதியிருந்தார் தங்களுக்கு?''

''அவருடைய யாத்திரை விவரங்களை எனக்கு அவ்வப்போது தெரிவிக்கும்படி கேட்டிருந்தேன். அந்தப்படியே எழுதிக் கொண்டு வந்தார். 'ஆயனரைப் போன்ற மகா சிற்பியும் சிவகாமியைப் போன்ற நடனகலா ராணியும் இந்தப் பரத கண்டத்தில் வேறு எங்கும் இல்லை!' என்று ஒருதடவை எழுதியிருந்தார்.''

''நாகநந்தி பிக்ஷு நல்ல ரசிகர் போலிருக்கிறது. அவர் இப்போது எங்கேயோ?''

''அதுதான் தெரியவில்லை. ஒரு வேளை உங்களுக்குத் தெரிந்திருக்கலாமென்று நினைத்தேன்.

மகேந்திரர் மௌனமாயிருந்தார்.

''நாட்டில் இருந்த புத்த பிக்ஷுக்களையெல்லாம் ஒற்றர்கள் என்று நீங்கள் பிடித்துச் சிறைப்படுத்தியதாகக் கேள்விப்பட்டேன். ஒருவேளை நாகநந்தி பிக்ஷுவையும் ஒற்றர் என்று சந்தேகித்துச் சிறைப்படுத்தி விட்டீர்களோ, என்னவோ?''

# மே

ற்குறித்த சம்பாஷணை நடந்து கொண்டிருக்கையில், சிவகாமி

யின் கண்கள் கரகோஷம் செய்து ஆர வாரித்துக் கொண்டிருந்த சபையோரின் மலர்ந்த முகங்களைப் பார்த்த வண்ணம் சுற்றிக் கொண்டு வந்து, மகேந்திர பல்லவரின் உற்சாகம் ததும்பும் முகத்தைப் பார்த்துவிட்டு, அடுத்தாற்போல் வாதாபிச் சக்கரவர்த்தியின் கிளர்ச்சி கொண்ட முகத்தில் வந்து நின்றன.

அவ்விதம் நின்றதும் சிவகாமியின் உள்ளத்தில் இத்தனை நேரமும் படர்ந்து வேதனை செய்துகொண்டிருந்த மாயத் திரை பளிச்சென்று விலகிற்று. நிழலா யிருந்த ஞாபகம் தெளிந்த உருவெடுத்த மனக்கண் முன்னால் நின்றது. ஆ! அந்த முகம்! அப்படியும் இருக்க முடியுமா? இரு மனிதருக்குள் அத்தகைய முக ஒற்றுமை சாத்தியமா? அல்லது இருவரும் ஒரு வர்தானா? மகேந்திர சக்கரவர்த்தி பலவித மாறுவேஷங்கள் போட்டுக் கொண்டு திரிவதுண்டு அல்லவா? அதுபோலவே வாதாபிச் சக்கரவர்த்தியும் நாகநந்தி பிக்ஷுவாகத் தென்னாட்டில் உலவிக் கொண்டிருந்தாரா?

இத்தகைய எண்ணங்களினால் சிவ காமியின் உள்ளம் குழம்பிக் கொண் டிருக்கும்போதே, மகேந்திர பல்லவர் நடனத்தை முடித்து விடலாம் என்று ஆயனருக்கு சமிக்ஞை செய்தார்.

நடனக் கலையின் ஆதி தெய்வமும் தமிழ்நாட்டின் தனிப் பெருந்தெய்வமு மான ஸ்ரீ நடராஜமூர்த்தி தில்லைப் பதியில் ஆடிய ஆனந்த நடனத்தை வர் ணிக்கும் பாடலோடும், அதற்குரிய நடன அபிநயத்துடனும் அன்றைய நடன வினிகை முடிவுற்றது.

"இம்மாதிரி ஒரு நடனம் இதற்கு முன் னால் நடந்ததில்லை; இனிமேலும் நடக் கப் போவதில்லை!" என்று அம் மகா சபையிலே கூடியிருந்த ரஸிகர்கள் ஏகமனதாக அபிப்பிராயப்பட்டார்கள்.

மகேந்திர பல்லவர் மீண் டும் சமிக்ஞை செய்ததின் பேரில் ஆயனரும் சிவகாமி யும் இரு சக்கரவர்த்திகளும் அமர்ந்திருந்த சிம்மாசனங்களுக்கு அருகே சென்று வணங்கி நின்றார்கள். மகேந்திர பல்லவர், "ஆயனரே! முன் தடவை இதே இடத்தில் சிவகாமியின் அரங்கேற்றம் நடந்து கொண்டிருந்தபோது, இடையிலே தடைப்பட்டதல்லவா? அந்தத் தடைக்குக் காரணமான வாதாபிச் சக்கரவர்த்தி இங்கு இன்று வீற்றிருந்து உமது குமாரியின் அற்புத நடனத்தைப் பார்த்துக் களித்தார்!" என்று கூறி விட்டுச் சிவகாமியைப் பார்த்து, "அம்மா, சிவகாமி! வாதாபிச் சக் கரவர்த்தி உன்னுடைய நடனக் கலைத் திறமையில் ஒரேயடியாக மயங்கிப் போய் விட்டார். உன்னையும் உன் தகப்பனாரை யும் தம்முடன் வாதாபிக்கு அனுப்பி வைக்கும்படி கேட்கிறார். உனக்குப் போகச் சம்மதமா?" என்று வினவினார்.

சிவகாமி கோபத்தினால் தன்னடக் கத்தை இழந்து, "பிரபு இந்த ஏழைப் பெண் இந்தத் தேசத்தில் இருப்பதே தங் களுக்குப் பிடிக்கவில்லையா?" என்றாள்.

இம்மொழிகள் ஆயனருக்கும் இன்னும் பக்கத்தில் நின்றவர்களுக்கும் வியப்பையும் பயத்தையும் அளித்தன. ஆனால் மகேந்திர பல்லவரின் முகத்தில் மட்டும் புன்னகை தான் தவழ்ந்தது. அவர் வாதாபிச் சக்கர வர்த்தியைப் பார்த்து, "சத்யாச்ரயா! பார்த் தீர்களா? சாட்டையினால் அடித்து நட னம் ஆடச் சொல்லும் நாட்டுக்குக் கலை ஞர்கள் போக விரும்புவார்களா?" என்றார்.

அப்போது புலிகேசியின் முகம் கறுத் ததையும், அவருடைய கண்களில் கனல் எழுந்ததையும் கவனியாமல், மகேந்திரர் "அம்மா சிவகாமி! உன்னை நாட்டை விட் டுத் துரத்த நான் விரும்பவில்லை. இந்த நகரத்தை விட்டு உங்களைப் போகச் சொல்லவே எனக்கு இஷ்டமில்லை. ஆயனரே! இன்று இவ்வளவு அற்புதமாக நடனம் ஆடிய சிவகாமிக்கு நான் பரி சுகள் கொடுக்க வேண்டும். அதுவரை சில தினங்கள் நீங்கள் நகரிலேயே இருக்க வேண்டும். கமலியின் வீட்டில் போயிருங் கள். கமலியும் சிவகாமியைப் பார்க்க ஆவ லாயிருக்கிறாள்... பின்னர் அங்கு நான் வந்து உங்களுடன் சாவகாசமாகப் பேசு கிறேன்!" என்றார்.

(தொடரும்)

**செயல் தலைவராக நியமிக்கப்பட்டவுடன் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன், ''நானும் சோ. பாலகிருஷ்ணனும் இரட்டைக் குழல் துப்பாக்கியாகச் செயல்படுவோம்'' என்றார். அப்படித்தான் செயல்படுகிறார்களா? பதில்களை வைத்து நீங்களே தீர்மானியுங்கள்.**

**சுப்ரீம் கோர்ட் சொல்லியும் கேளாத கர்நாடகா காங்கிரஸ் அரசை டிஸ்மிஸ் செய்ய வேண்டுமென்று வாழப்பாடியார் சொல் கிறாரே! இது கட்சிக் கட்டுப்பாட்டை மீறிய செயல் அல்லவா?**

**சோ. பாலகிருஷ்ணன்:** தனி இயக்கம் நடத்திவிட்டு சமீபத்தில்தான் காங்கிரஸில் சேர்ந்திருக்கிறார் அவர். இப்போது அவர் ஏ.ஐ.சி.சி உறுப்பினர். எனவே அவர் மீது நடவடிக்கை எடுக்க வேண்டியது காங்கிரஸ் மேலிடம்தான். நான் இதற்குப் பதில் சொல்லி அவருடன் லாவணி பாட விரும்பவில்லை.

**ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்:** மனத்தில் தோன்றுவதை உளறிக் கொட்டுகிறார் வாழப்பாடியார். இந்த விஷயத்தில் கர்நாடக அரசை செயல்படுத்த வேண்டிய பொறுப்பு மத்திய அரசுக்குத்தான் உள் ளது. இன்னமும் காங்கிரஸில் ஒட்டாமல் தனியேதான் நிற்கிறார் வாழப்பாடி.

**'சோனியா பற்றி நான் சொன்னதற்கு மன்னிப்புக் கேட்டுக் கொள் கிறேன்' என்று கூறி, தேர்தலின்போது காங்கிரஸுடன் ஜெ. கூட் டணிக்கு வந்தால்...?**

**சோ.பா:** ஜெயலலிதா, சோனியா பற்றிச் சொன்னதை ஒருபோதும் தமிழக மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். எனவே அபாண்டமாகச் சொல்லிய ஜெ.வுடன் உறவு பற்றி பேச்சே எழாது. அடுத்ததாக இப் போது நடைபெறுவது மக்கள் விரோத அரசு. எனவே அ.தி.மு.க.வுடன் கூட்டு வைப்பது தற்கொலைக்குச் சமம். இதுதான் இப்போதைய நிலை. ஆனால் தேர்தல் சமயத்தில் கட்சி மேலிடம்தான் கூட்டணி பற்றி முடிவு செய்யும்.

**ஈ.வி.கே.எஸ்:** சில பேருக்கு மன்னிப்பே கிடையாது. குறிப்பாக ஜெ.வுக்கு எந்தக் காலத்திலும் மன்னிப்பு கிடையாது. எனவே கூட்டணி

# 'ஜெய' கோஷமா:

பற்றி பேச்சே எழாது.

**காவிரிப் பிரச்னையில் சோனியா மௌனம் காப்பது ஏன்?**

**சோ.பா:** கர்நாடகத்திலுள்ள பா.ஜ.க அ.தி.மு.க, தி.மு.க உட்பட எல்லா கட்சிக்காரர்களும் தமிழ்நாட்டுக்குத் தண்ணீர் தரக்கூடாது என் பதில் ஒற்றுமையாக இருக்கிறார்கள். காங்கிரஸ் கட்சி மட்டும் இது போன்ற நிலையெடுத்தால்கூட சோனியா தலையிட முடியும். அனைத் துக் கட்சிகளும் ஒரே மாதிரியான முடிவெடுத்தால் காங்கிரஸ் தலைமை என்ன செய்ய முடியும்? எனவே சோனியா தலையிடாதிருப்பதை விமர்சிப்பது அர்த்தமற்றது.

**ஈ.வி.கே.எஸ்:** இதற்கு சோனியாவின் தலையீடு தேவையில்லை. இரண்டு மாநிலங்களும் பேசித் தீர்த்தால் பிரச்னை தீரும் வாய்ப்பு உண்டு. இந்தப் பிரச்னையில் துவக்கத்திலிருந்தே 'எடுத்தேன்; கவிழ்த்தேன்' என்று பேசி, சிக்கலான இந்த நிலைக்குக் கொண்டு வந்ததற்கு ஜெயலலிதா மட்டுமே காரணம்.

**சட்டமன்றத் தொடர் நடக்க இருக்கிறது. பழக்க தோஷத்தில் காங்கிரஸ் உறுப்பினர்கள் 'ஜெய'கோஷம் போட்டால் நடவடிக்கை இருக்குமா?**

**சோ.பா:** 'பழக்க தோஷம்' எல்லாம் இருந்தாலும் நாங்கள் எவ்வளவு ஒற்றுமையாக இருந்து இந்த மக்கள் விரோத அரசை எதிர்க்கப் போகிறோம் என்று பொறுத்திருந்து பாருங்கள்.

**ஈ.வி.கே.எஸ்:** மானத்தோடு வாழ விரும்பும் எந்த காங்கிரஸ்காரனும் 'ஜெய' கோஷம் போட மாட்டான். அப்படியும் மீறி யாராவது ஜெயலலிதாவுக்கு ஜால்ரா அடித்தால் காங்கிரஸ் தொண்டர்கள் அவர்களைக் 'கவனித்து'க் கொள்வார்கள்.

**செயல் தலைவரின் பொறுப்புகள்தான் என்ன?**

**சோ.பா:** காங்கிரஸ் என்பது கடல். த.மா.கா என்ற ஆறு இப்போது அதில் கலந்துள்ளது. இரு தண்ணீரும் நன்றாகக் கலக்க சிறிது காலம் பிடிக்கும்... அந்த வேலையைத்தான் நானும் இளங்கோவனும் செய்து வருகிறோம். இது சிறிது காலம்தான். அதன்பின் தேர்தல் மூலம் புதிய தலைவர் தேர்ந்தெடுக்கப்பட இருக்கிறார்.

**ஈ.வி.கே.எஸ்:** இது என்ன கேள்வி? செயல்படுவது... சோ.பா.வுடன் இணைந்து செயல்பட்டு தமிழகத்தில் காங்கிரஸை வளர்ப்பதுதான் வேலை.





# கேள்வி ஒன்று; பதில் இரண்டு!

சந்திப்பு: ப்ரியன்

ரூ.100 பரிசு பெறுபவர் :
எஸ்.நிஷா,
1. கேட் தெரு,
பாம்பன் - 623 521.

ரூ.50 பரிசு பெறுபவர் :
வி. மைதிலி, ஸ்ரீசரஸ்வதி
வித்யாலயா, N & P ஸ்கூல்,
மருதாடு, வந்தவாசி தாலுகா.
திருவண்ணாமலை
மாவட்டம் - 604 405

## ரஜினி உண்ணாவிரதம்– அகங்காரத்தின் விளைவுதானே?

● சித்ரா கிருஷ்ண மூர்த்தி, கும்பகோணம்

*? மத்திய அமைச்சரவையில் கோஷ்டிகள் இல்லை என்று அமைச்சர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் கூறியுள்ளது பற்றி..?*

! மெத்த மகிழ்ச்சி! இந்தச் செய்தியை எந்தெந்தக் கோஷ்டிகள் சார்பில் சொல்கிறார் எனவும் தெரிந்து கொள்ள விரும்புகிறோம்.

● முகவை முத்துசாமி, தொண்டி

*? மக்கள் சக்தியை வைத்துக் கொண்டு ஓர் அரசியல்வாதி என்ன செய்துவிட முடியும்?*

! வைத்துக் கொண்டிருந்தால் ஒன்றுமே செய்ய முடியாது; மக்கள் சக்தியைப் பயன்படுத்திக் கொள்ளத் தெரிய வேண்டும். அப்போது வானமே எல்லை!

● பா. அச்சுதன், சென்னை - 30

*? மன்னிக்க முடியாத தவறு?*

! NCERT பள்ளி பாடப் புத்தகங்களில் இந்த ரகத் தவறுகள் - தகவல் தவறுகள் - ஏராளமாக உள்ளனவாம்.

● ஆர். காஞ்சனா, நெய்வேலி - 3

*? கட்டாய மதமாற்ற தவிர்ப்புச் சட்டத்தை தமிழக அரசு கொண்டு வந்துள்ளது குறித்து..?*

! சட்டசபையில் சர்ச்சையின்றி நிறைவேற்றப்பட்ட மிகவும் சர்ச்சைக்குரிய சட்டம். இந்த அவசரம் எதற்கு என்று புரியாத அவசரச் சட்டம். மதமாற்றம் எவ்வளவு சர்ச்சைக்குரியதோ, அந்த அளவுக்குச் சட்டமும் சர்ச்சைக்குரியது. ஹிந்துக்கள் ஜாதி அடிப்படையில் சொந்த சகோதரர்களையே வேற்றுமை பாராட்டி புறக்கணிக்கும்வரை, மதமாற்றம் நிகழத்தான் செய்யும். அதற்கேற்ப சட்டத்திலிருந்து நழுவுவதும் சாத்தியமே.

● வே. ஈஸ்வரன், இராஜபாளையம்

*? காவிரி விஷயத்தில், ரஜினி முதலில் தாம் ஓர் இந்தியன் எனக் கூறியிருப்பது பற்றி..?*

! தமிழகத்தில் கன்னடியன் என்றும், கர்நாடகாவில் மஹாராஷ்ட்ரியன் என்றும், மஹாராஷ்டிராவில் தமிழன் என்றும் அவரைப் பந்தாடியதில் ஏற்பட்ட ஞானோதயம். காவிரி விஷயத்தில் மட்டுமின்றி எல்லா விஷயங்களிலும் இந்த ஞானோதயம் எல்லோருக்கும் ஏற்பட்டால் அப்புறம் நாடு கிடுகிடுவென்று முன்னேறி விடாதா!

● எஸ். நிஷா, பாம்பன் ❒

*? அனைத்து சாதியினரும் அர்ச்சகராக இருக்கலாம். பிராமணர்களே அர்ச்சகராகத் தொடர்வது சமூக அநீதி என்று சுப்ரீம் கோர்ட் கூறியுள்ளதே?*

! 'முறையான பயிற்சி இருந்தால்' என்ற ஒரு கொக்கி போடப்பட்டிருப்பதைக் கவனித்தீரா? அதிலே கோட்டை விடாமல் இருந்தால் சரி.

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

*? காஷ்மீர் தேர்தல் முடிவுகள் அப்துல்லா கட்சிக்குப் பாடமாக அமைந்தது ஏன்...?*

! தோல்வியுற்றது அப்துல்லா கட்சி மட்டுமல்ல; மத்தியில் அது கைகோத்துக் கொண்டிருக்கும் பி.ஜே.பி.யும் மண்ணைக் கவ்வியிருக்கிறது. மக்கள் அமைதியை விரும்புகிறார்கள். ஆட்சி நடத்திய இந்த இரு கட்சிகளாலும் அதைத் தர இயலவில்லை. அதனால் மாற்றுக் கட்சிகளுக்கு வாய்ப்பளித்திருக்கிறார்கள். இதைப் புரிந்து கொண்டு மக்கள் வைத்த நம்பிக்கைக்குப் பாத்திரர்களாக நடந்து கொள்வது ம.ஜ.க.வுக்கும் காங்கிரசுக்கும் நல்லது. ஆனால், முதல்வர் போட்டி தொடங்கி விட்டதைப் பார்த்தால் வேதனையாக இருக்கிறது.

● ஆர். அப்துல் கலாம், திருச்சி - 21

*? காவிரிப் பிரச்னை தீர கங்கா - காவிரி*

இணைப்பு வேண்டும் என்று ரஜினி சொன்னதை டாக்டர் கிருஷ்ணசாமியும் வரவேற்றிருக்கிறாரே?

! ரஜினி என்ன புதிதாய்ச் சொல்லிவிட்டார் இவர் வரவேற்பதற்கு. இந்த இரண்டு பேர் ஆதரவும், ஒரு கோடி ரூபாயும் இல்லாமல்தான், இத்தனைக் காலமும் இந்தத் திட்டம் தடைப்பட்டு நிற்கிறதாக்கும்.

● கே. சுதர்ஷன், தூத்துக்குடி



* 'இழைப்பு' அரசியல்! * பேரிரைச்சல்!



* வழக்கும் விவகாரமும்

# ● நீங்கள் கேட்டவை -தராசு

? 'ஷிவானி பழம்பெரும் தலைவருமில்லை. மூத்த பத்திரிகையாளரோ சுதந்திரப் போராட்ட வீரரோ இல்லை.. பின் ஏன் அவர் கொலை வழக்குக்கு இவ்வளவு முக்கியத்துவம் தருவதாம்?' என்று கைது செய்யப்பட்டவரின் மனைவி கேட்கிறாரே?

! கைதான போலீஸ் அதிகாரி ஷர்மா கூட சாதாரண ஆள்தானே. அவர் பேரில் குற்றம் சாட்டப்பெற்றதற்காக அவர் மனைவி ஆகாசத்துக்கும் பூமிக்கும் குதித்து, ஆபாசத் தாக்குதல் வேறு நடத்தியது ஏனாம்!

● வி. மைதிலி, மருதாடு ★

? ஜெர்மனியிலுள்ள மிருகக் காட்சிசாலையில் சிம்பன்ஸி குரங்குக்கு வயதாகி விட்டதால், அதை ஆப்பிரிக்கக் காடுகளுக்கு அனுப்பிவிடத் தீர்மானித்து விட்டார்களே?

! உண்மையெனில், மிகக் குரூரம்! மனித கண்காணிப்பில் வனவிலங்குகள் வளர்ந்தால், அவை மீண்டும் காட்டில் போய்ச் சுதந்தரமாய் வேட்டையாடி / உணவு தேடி வாழத் தெரியாமல் இறந்து போகும். அதுவும் கிழட்டு சிம்பன்ஸி என்றால், அதன் ஆயுள் சீக்கிரமே முடிந்துவிடும்.

● வி. பத்மா, கும்பகோணம்

? ரஜினியின் உண்ணாவிரதம், 'பாரதிராஜாவின் கீழ் தாம் செயல்படுவதா?' என்ற அகங்காரத்தின் விளைவா...?

! அல்ல. போராட்டம் அர்த்தமுள்ளதாக இருக்க வேண்டும் என்ற தர்க்க ரீதியான முடிவின் விளைவு. பாரதிராஜாவின் போராட்டம்தான் கூட்டத்தைப் பெரிதாகச் சேர்த்தாலும் 'full of sound and furg, signifying nothing' என்பது போல ஆகிவிட்டது.

● ஆர்.ராமசுப்ரமணியன், கோவை

? எதெதற்கோ பொடாவைப் பயன்படுத்தும் ஜெயலலிதா, பாப்பாபட்டி, கீரிப்பட்டி பஞ்சாயத்துத் தேர்தலைக் கேலிக் கூத்தாக ஆக்கும் நபர்களுக்கு எதிராக அதைப் பயன்படுத்தலாமல்லவா?

! நோயைவிட, நீங்கள் அதற்குச் சிபாரிசு செய்யும் மருந்து கொடுமையானது.

● கண்ணம்மா இராமசாமி, திருச்சி

? ஒரு பெண்ணின் சுதந்தரமும் நல்வாழ்வும், முடிவாக 'விவாகரத்தில்தான்' அடங்கியிருக்கிறது என்பது போல் விவாகரத்து வழக்கில் வக்கீல்கள் வாதாடுகிறார்களே. இது சரியா?

! விவாகரத்துக்காக வாதாடும் வக்கீல்கள் வேறு எப்படி வாதாட முடியும்? விவாகரத்து கோருபவர்தான் மிகக் கவனமாய் யோசித்து முடிவு எடுக்க வேண்டும். வலிகள் இல்லாத மணவாழ்க்கை இல்லை. மணமுறிவு வலிகளைப் போக்குமா அல்லது அதிகரிக்குமா என்பது அவரவர் வாழ்வின் சந்தர்ப்ப சூழ்நிலையையும் மனோநிலையையும் பொறுத்தது.

# அன்று

பாபர் மசூதி தகர்க்கப்பட்ட டிசம்பர் ஆறாம் தேதியை விடவும் அதிக ரணமான நாள் 1984 டிசம்பர் இரண்டு. போபால் யூனியன் கார்பைட் தொழிற்சாலையிலிருந்து லெதர் வகை விஷவாயுவும், அதைத் தொடர்ந்து எட்டாயிரம் மனித உயிர்களும் கசிந்து, காற்றில் கலந்த கொடூரம் நிகழ்ந்த நாள்.

உலகம் முழுவதும் மரண வாசனையை உணர வைத்த இந்தச் சம்பவம் நிகழ்ந்த சில மணி நேரங்களில், உயிரை மதிக்காமல் நகரில் நுழைந்து, கண்ணீர்க் காட்சிகளைப் பதிவு செய்து புகழ் பெற்றவர் புகைப் படக்காரர் ரகுராய். இந்தத் துயரம் நிகழ்ந்து பதினெட்டு ஆண்டுகள் கழித்து கிரீன்பீஸ் இண்டியா அமைப்பிற்காக, கடந்த ஆண்டு மீண்டும் தமது கேமராவுடன் போபாலுக்குள் நுழைந்து திரும்பியிருக்கிறார் ரகுராய்.

முடமாகிப் போன போபாவின் இன்றைய குறுக்கு வெட்டுத் தோற்றத்தைக் கருப்பு வெள்ளைப் படங்களாய் கண்முன் நிறுத்துகிறார். சென்னை 'அம்திஸ்ட்' அரங்கில் கிரீன்பீஸ் காட்சிக்கு வைத்திருக்கும் புகைப்படக் காட்சியிலிருந்து இங்கே சில படங்கள்.

— ஜெ.



• ஒட்டுமொத்த தகனம்



• மனைவியின் பிணத்தை சுமந்து செல்லும் கணவன்



• அண்ணனும் தம்பியும் ஒரே குழியில்!

# தொடரும் சோகம்!



இன்று



• விஷவாயுக் கசிவு தினத்தில் பிறந்த இந்தப் பெண்ணுக்கு 'கேஸ் தேவி' என பெயர் சூட்டிவிட்டார்கள்.

• கணவனை இழந்த பெண்களுக்காக, அரசே கட்டித் தந்திருக்கும் 'விதவைக் காலனி'.



• உடல் நலம் பாதிக்கப்பட்ட ஜமீலா அவரது தோழி ஷாஹிஜஹான் போன்ற பெண்களை மணந்து கொள்ள போபால் இளைஞர்கள் தயாரில்லை.



பழகிப்போன சிலரது முகபாவனைகளின் புதிய பரிமாணங்கள் காணக் கிடைப்பது நிச்சயம் முன்வினைப் பயன்தான். எங்கள் நிறுவன மேலாளர் மூலம் அத்தகைய முன்வினைப் பயனை நாங்கள் எல்லோரும் ஏக போகமாய்ப் பெற்றோம்.

அன்று காலை ஒன்பது மணிக்கு மிகவும் பதற்றமாய் தன் அறைக்குள்ளே கூடச் செல்லாமல் வெளியிலேயே நின்றிருந்தார் எங்கள் மேலாளர். கிட்டத்தட்ட முந்நூற்று சொச்சம் பேரைக் கண்களாலேயே மிரட்டும் அவரை, ஒரு சாதாரண அற்ப ஜந்து வெளியில் நிறுத்தியது கொடுமை.

'பளபள' மொசைக் தரையும், 'வெனீஷியன் பிளேடு' ஜன்னலும், 'குளுகுளு' ஏசியும், எந்நேரமும் கமந்த மல்லிகை மணம் வீசும் அவரது அறையில் எலியா? எங்களைப் போலவே எங்கள் மேலாளராலும் அதனை நம்ப முடியவில்லை.

எங்கள் மேலாளருக்குத் தன் அறைக்குள் எலி வந்ததை விட கோபம், அது அவரது புகழ் வாய்ந்த ரத்த நிறக் குஷன் நாற்காலியின் மையத்தில் ஒய்யாரமாய் அமர்ந்திருந்ததுதான்.

அட்டெண்டர் பழனி என் காதில் கிசுகிசுப்பாய்,

"நாம நினைக்கிற மாதிரி இது வெறும் கோவம் இல்ல சார்! அதிகாரச் சண்டை...." என்றான்.

வனஜாவும் தன் பங்குக்கு,

"ஒரு வேளை அந்த எலி 'கெட் அவுட் ஐ ஸே'ன்னு கத்தியிருக்குமோ...?" என்றாள்.

எலியின் இக் விஜயத்தை எதிர்கொள்ள உடனடியாக ஒரு 'டாஸ்க் ஃபோர்ஸ் கமிட்டி' அமைக்கப்பட்டது. பிடிப்பதா, அடிப்பதா, விரட்டுவதா என்பது போன்ற விவாதங்களில் அந்தக் கமிட்டி உறுப்பினர்கள் ஈடுபட்டிருக்க, மேலாளரின் நாற்காலியில் உட்கார்ந்து பரபரப்பு ஏற்படுத்திய அந்த எலி, எனக்கு எங்கள் துளசி மாமாவின் நினைவுகளைக் கிளறிவிட்டது.

என் சின்ன வயது ஞாபகங்களில் மிக அழுத்தமான பதிவை ஏற்படுத்திய அவர், எங்கள் வீட்டுக்கு முதன் முதலில் வந்தபோது, அவருடைய தெற்றுப் பல்லைப் பார்த்து நான் உட்பட எங்கள்

# எலிங்கத்துப்

வீட்டு வாண்டுகளெல்லாம் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டோம். துளசி மாமா தன் வாயை முழுசாய் மூடினாலும் அந்தத் தெற்றுப்பல் வெளியே தெரியுமாறு ஒரு முக அமைப்பு அவருக்கு.

வந்த கொஞ்ச நாட்களிலேயே துளசி மாமா எங்கள் அப்பாவுக்கு வலது கையாகிப் போனார். விவசாய வேலைகளில் அப்பாவுக்கு இணையான அந்தஸ்தை அடைந்தார்.

துளசி மாமா எங்களுக்கெல்லாம் சுவாரஸ்யமானது அந்த வருட கோடைக் காலத்தில் தான். கோடைக் காலம் என்பது பொதுவில் விவசாயிகளுக்கு ஒரு முழு ஓய்வு காலமாக இராது. காய்ந்த வயல்களுக்குச் சாண உரத்தை வண்டி வண்டியாகக் கொட்டுவது, வீடு –

வயல்களுக்கு மூங்கில் வேலியிடுவது, தென்னங்கன்றுகளுக்கு வறண்ட குளங்களின் சத்து மண்ணை அள்ளி வைப்பது என நீளும்.

எங்களுக்கும், துளசி மாமாவுக்கும் அந்த வருட கோடைக் காலத்தைய முக்கிய வேலை வயல் எலிகளைப் பிடிப்பதாக அமைந்து விட்டது.

இடத்தை மிகச்சரியாகச் சொல்வார். வெட்டியெடுத்தால் ஒரு பொந்திலேயே இரண்டு மரக்கால் நெல் கூடக் கிடைக்கும். துளசி மாமா நல்ல வலுவானவர்கூட. வரப்பின் பொந்துகளுக்குள்ளே எலி ஓடும் வேகத்துக்கு வரப்பை வெட்டிக் கொண்டே துரத்திச் செல்வார். சில சமயம் வித்தியாசமான வழிகளைக் கையாள்வார். பொந்துக்குள்ளே வேண்டுமட்டும் தண்ணீரை விட்டுவிட்டு கன்னத்தில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பார். சிறிது நேரத்தில் தானாக தலையைச் சிலுப்பிக் கொண்டு வெளியே ஓடி வரும் எலியைப் பிடித்துக் கொள்வார். எலி பிடிக்கும் நேரங்களில்






• திருவையாறு பாலகுமார்

எலிகள் வயல் வரப்புகளுக்குள் பொந்து அமைத்து கோடைக் காலத்தில் ஆற அமர சாப்பிடுவதற்காக நெல்லைச் சேர்த்து வைத்திருக்கும். அந்தப் பொந்துகளை அடையாளம் கண்டு, வளமான எலிகள் சேர்த்து வைத்திருக்கும் நெல்லை கொள்ளை அடிப்பதற்காகத் தொடங்கியது, போகப் போக பெரிய சுவாரஸ்யமாகிப்போனது.

துளசி மாமா நிறைய நெல் சேர்ந்திருக்கும்

எங்களுக்கு எலிகளைக் குறித்து அவ்வப்போது வகுப்புகளும் எடுப்பார்.

"எலியில மூணு வகை இருக்கு... இந்த காட்டெலி, வீட்டெலி, வெள்ளெலி எல்லாம் மிதவாதிங்க... நெல்லை ஒளிச்சு வைக்கும். சாக்கை ஓட்டை போடும்.... தேங்கா இரண்டும்... அவ்வளவுதான். இந்தப் பெருச்சாளி இருக்கே, அது சரியான தீவிரவாதி. வீட்டையே உடைக்கும். எலி வகையிலேயே



''சாயங்காலம் கூவுற மாதிரி எங்காவது ஒரு சேவல் கிடைக்குமா?''
''ஏன்?''
''எங்க ஆபீசுக்குத்தான்!''
— எம். அசோக்ராஜா

அஹிம்சாவாதின்னு ஒண்ணு இருக்கு. அது மூஞ்சூறு. பிள்ளையார் வாகனம். ரொம்பத் தொல்லை பண்ணாது. அதான் மூஞ்சூறை யாரும் அடிக்கறதில்ல..''

எலிகள் இல்லாத கிராமத்து விவசாயி வீட்டை எட்டாவது அதிசயத்தில் சேர்க்கலாம். எங்கள் வீட்டுக்கு அந்தக் கொடுப்பினை இல்லை.

சில சமயம் எங்கள் இரவுகளைச் சரியான சப்தக்காடாக்கிவிட்டு தப்பி ஓடி, கூரை மூங்கிலின் ஓரத்தில் எட்டிப் பார்த்து எக்களிக்கும். தடியும் கையுமாய் அப்பா எலி அடிக்காத கவலையோடு தூங்கப் போவார்.

அப்பாவின் தொடர் தோல்விகளால் எலி ஒழிப்பு அடுத்த கட்டத்தை எட்டியது. எலிப் பொறிக் கட்டையில் வடையோ, கருவாடோ, தேங்காயோ வைத்து எலியைப் பிடிக்கத் திட்டமிடப்பட்டது. வடை தினமும் கிடைக்க வாய்ப்பில்லை. தேங்காயை விட கருவாடு மிகுந்த மணம் வீசி எலியைக் கவரும் என்பதால், கருவாடு வைப்பது என முடிவானது.

''அல்வாத் துண்டு மாதிரி ஒரு வஞ்சிரம் பிகக்கை முழுசா வக்கிறீங்களே..'' என்ற அம்மாவின் புலம்பல்களுக்கிடையே வீடு மணக்கும் கருவாட்டுடன் எலிப்பொறி வைக்கப்பட்டது.

மறுநாளே ஒரு எலி பிடிபட்டது.

ஆனால் இதனையே தொடர முடியாமல் ஒரு விபத்து நடந்து விட்டது. அப்பா தினமும் வைக்கிற இடத்தில் எலிப்பொறி வைக்காமல், ஒரு மாற்றமாய் சமையலறையில் வைத்துவிட்டார். அன்று பார்த்து மின்சாரம் திடீரென துண்டிக்கப்பட, அம்மா தீப்பெட்டித் தேடி எலிப்பொறியைத் தடவ, அது அம்மாவின் சுட்டு விரலைக் கவ்விக் கொண்டது. இருளில் எலிப் பொறியை ஒரு பாம்பாய் நினைத்து அம்மா உச்சக்கட்டமாய் அலற, தெருவே கூடிவிட்டது.

மறுநாள் சுட்டு விரலில் கட்டுடன் எலிப் பொறியை வெந்நீர் அடுப்பில் உடைத்து வைத்து விட்டாள் அம்மா.

இந்த நேரத்தில்தான் துளசி மாமாவின் சூரத்தனம் அம்மாவுக்குத் தேவைப்பட்டது.

துளசி மாமா வழக்கம்போல் பேசிக் கொண்டே தன் பணியைத் தொடங்குவார்.

''ஒரு புத்திசாலி ராஜா மாதிரி சுத்துப் பட்டு நாடெல்லாம் கைவசப்படுத்திட்டு, கடைசியிலதான் அரண்மனை மேல கை வைக்கணும்.''

கதவுகள், ஜன்னல்கள் என எல்லாவற்றையும் சாத்தி, மிச்சமிருக்கிற ஓட்டைகளில் கோணிப்பையால் மூடி, ஒவ்வொரு கதவோரமும் ஆளுக்கொரு குச்சியோடு நிற்கச் சொல்வார். மெதுவாய் எலியை நிமிண்டுவார்.

''ஓடற எலிக்கு ஒரு சாண் முன்னாடி வெறுந்தரையைப் பாத்து அடிக்கணும்... அப்பதான் அடி சரியா விழும்...பதற்றப் படக் கூடாது.... நிதானமா இருக்கணும்... புத்திசாலி ராஜா மாதிரி..''

**து**ளசி மாமா நெடுநாள் எங்களோடும், எலிகளோடும் இருக்கவில்லை. அவர் நன்றாகப் படித்ததால் அரசாங்க உதவி கிடைத்து வெளியூருக்கு, விடுதியில் தங்கி படிக்கப் போய்விட்டார். எல்லாமே அரசாங்க செலவுதானாம். அம்மா நெடுநாள் துளசி மாமாவின் எலியடிப் புராணத்தைப் பாடிக் கொண்டிருந்தாள்.

''சப்தம் காட்டாம ஒரு அடியில அடிச்சுப்புடுவான். ம்ஹூம்... உங்க அப்பாவும் இருக்காரே... எலியையும், என்னையும் தவிர மீதி எல்லாத்தையும் அடிச்சுப்புட்டுக் குறட்டை விடப் போயிடுவாரு..''

**து**ளசி மாமாவின் நினைவுகள் இலேசாய் மழுங்கிப்போன அடுத்த நாள் அலுவலகம் போனபோது எல்லோரும் நமுட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டிருந்தனர்.

நேற்றே எலித்தொல்லையை ஒழிக்க

## இசை — விருந்தா; மருந்தா?




'மியூசிக் தெரபி' என்ற தலைப்பில் மும்பை சண்முகானந்தா அரங்கில் அண்மையில் நடைபெற்ற 'மியூசிக் சிம்போசியம் 2002' விழாவில் கூட்டம் அலைமோதியது.

''இன்றைய சூழலில், ஆயிரத்தெட்டு டென்ஷன்களுக்கிடையே காசு செலவில்லாமல், ஆசுபத்திரி ஆபரேஷன் என்ற தொல்லை இல்லாமல், ஒரு குண நிவாரணியா? அது எப்படி?

லலிதா நவாவரணக் கிருதிகள் பாடியே ஒருவருக்கு ப்ளட் கேன்சர் சரியாகிவிட்டதாம். சூரியோதய சமயத்தில் பூபாளம் பாடியே ஒருவருக்கு கண் நோய் குணமாகிவிட்டதாம்.

காலையில் பாடும் ராகங்கள் 'கப'த்தையும், மதிய வேளை ராகங்கள் 'பித்'தத்தையும், இரவு ராகங்கள் 'வாத'த்தையும் குணப்படுத்துமாம்.

நோய்களில், தூக்கமின்மைக்கு நீலாம்பரி, நரம்புத் தளர்ச்சிக்கு கேதாரம், ஜீரணத்துக்கு ஸ்ரீராகம், காலை நோய்களுக்கு பூபாளம், மலைய மாருதம், பக்கவாதத்துக்கு த்விஜாவந்தி, ஹைபர் டென்ஷனுக்கு யதுகுல காம்போதி, மறதிக்கு ஹிந்தோளம், ஆஸ்த்மாவுக்குத் தோடி, வயிற்றுவலிக்கு ஆபேரி, தலைவலிக்கு அசவேரி, மத்யமாவதி, பிருந்தாவனி என்பதுடன், பைரவி ராகத்தைப் பாடினால் டிபி, கேன்சர், டயாபடீஸ், இரத்த அழுத்தம், ஜுரம் மற்றும் ஜன்மத்துப் பாவங்களால் வரக் கூடிய அத்தனை நோய்களி விருந்தும் நிவாரணம் கிடைக்குமாம்! (அதிகமாகச் சொல்லி உங்களைக் குழப்ப விரும்பாததால் ராசிக்கேற்ற ராகங்களைப் பட்டியலிடவில்லை)

இந்த இசை தெரபியை பொதுப்படையாக்க முடியாது. ஒருவருக்கு கர்நாடக இசை பிடிக்கும், மற்றவருக்கு 'பாப்' தான் ஒத்துக் கொள்ளும். அதனால் யாருக்கு எது ஒத்துக் கொள்ளும் என்று தனிப்பட்ட முறையில் ஆராய்ந்து செய்யவேண்டும். இது நோயைக் காட்டிலும், நோயுற்றவரைக் குணப்படுத்தும் முயற்சி. இதை ஒரு 'சப்ளிமென்ட்டாக', 'சிகிச்சையின் பலனை விரைவுபடுத்த உபயோகிக்கலாமே யன்றி, இசையால் மட்டுமே குணமாக்கி விடலாம் என்று அடித்து சொல்ல முடியாது'' என்று முடித்துவிட்டார்கள்.

— ஜெய்ஸ்ரீ ராஜ்

விஷம் வைப்பதாய் முடிவு செய்து, அதன்படியே வைக்கப்பட, அதனை உண்ட ஒரு எலி (மேலாளரின் குஷன் நாற்காலியில் நேற்று உட்கார்ந்த அதே எலியாக இருக்கலாம்) செத்துப் போனது. வேறு இடமா கிடைக்கவில்லை? அதே குஷன் நாற்காலியில் செத்துக் கிடப்பதைப் பார்த்த மேலாளரின் முகம் மற்றொரு அபூர்வ தரிசனத்தை எல்லோருக்கும் காட்டியிருக்கிறது.

எங்கள் செல்வாக்கு மிக்க மேலாளர் நாங்கள் உட்காரும் பெயிண்ட் உதிர்ந்த — சாதாரண வயர் பின்னிய — நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். அந்தக் குஷன் நாற்காலி ஓரமாய் தலையைத் திருப்பிக் கொண்டு கிடந்தது.

செத்துப் போன எலிக்கும் எங்கள் மேலாளருக்கும் ஏதோ பூர்வ ஜென்மப் பகை இருக்கலாமோ என்றெல்லாம் பேசிக் கொண்டனர்.

''இந்த பீத்த நாற்காலியில் உட்கார்ந்து நம்மளை முறைச்சார்னா சிரிப்பா வருது சார்...'' என்றான், பழனி வழக்கம்போல்.

இந்த நேரத்தில் துளசி மாமாவின் மிச்ச மிருக்கும் ஞாபகம் ஒன்றும் கிளர்ந்து வந்தது. துளசி மாமா எங்கள் வீட்டை விட்டுச் சென்று நீண்ட வருடங்களுக்குப் பிறகு ஒரு கடிதம் வந்தது. அவருக்குச் சென்னையிலேயே வேலை கிடைத்து விட்டதாம்.

ஒரு நாள் எங்கள் துளசி மாமா ரேடியோவில் பேசுவதாய் அறிந்து காத்திருந்தோம். எங்கள் ஊரும் காத்திருந்தது.

சரியாக ஆறே முக்காலுக்குப் பேசினார்.

'நமது மாவட்ட விவசாயிகள் கவனத்திற்கு:

எலி ஒழிப்பில் போதுமான கவனம் தேவை. விஷம் வைப்பதைவிட, கிட்டி முறையில் அதிக எலிகளை நாம் ஒழிக்க முடியும். எனவே விவசாயிகள் அனைவரும்...' என நீண்ட அவரது பேச்சில் முதலில் சுவாரஸ்யம் இழந்தது அம்மாதான்.

''அடக் கருமத்த...! இத்தனைப் படிப்பு படிச்சும் அவனுக்கு எலி புடிக்கிற புத்தி போச்சா பாத்தியா...?''



# On Diwali Day

*- Cover story on the festival of lights*

## JOY TO THE MONSOON

*- Poem Contest Results*

## HAIR RAISING

*- a Jayabalan story full of humour*




*- fascinating flora*

POSTER
VIRENDER SEHWAG

# GOKULAM

The monthly magazine for children

NOVEMBER 2002 Rs.6/- only

WRITE TO :

Circulation Manager,
47, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, CHENNAI - 600 097.

# பரமனும் சடையனும்



- நடந்து நடந்து
ஒரு வழியாய் ஆனது
கிராமத்து ஒற்றையடிப் பாதை

- சொல்லப்படாத கதைகள்
நிறையவே உறங்குகின்றன
சுமைதாங்கிக் கல் மீது.

- எல்லைப் பிடாரி அம்மனையும்
ஏமாற்றி விட்டு ஓடிப்போயின
இள வட்ட ஜோடிகள் பல.

- அடைமழை பார்த்து
அஞ்சாறு வருசமாச்சு
பெருமூச்சு விடுகிறது பெருசு.

- கருகிய ஏரியும் காய்ந்த வயலும்
முக்கால்வாசி சனங்களை
முட்டித் தள்ளியது ஊருக்கு அப்பால்.

- மீதமுள்ள நபர்களுக்கு
ஏழவு சொல்ல நாதி வேண்டுமென
எங்கும் பெயராமல் இருக்கின்றனர்
பறை கொட்டும் பரமனும்
சங்கு ஊதும் சடையனும்.

— தரும சேனன்

'முட்டைக்கோஸ் தலையா!' என்று கவுண்டமணி, செந்திலை எந்தப் படத்திலாவது கூப்பிட்டு மரியாதை பண்ணியிருக்கிறாரா என்பது நினைவில்லை. ஆனால் நம்முடைய மூளையும் அதில் தொடங்கும் நரம்பு மண்டலமும், தண்டு வடமும் வால் முளைத்த முட்டைக்கோஸ் போன்றதுதான்!

இந்த மூளையைப் பற்றிப் படு சுவாரஸ்யமான தகவல்களை அண்மையில் வெளியிட்டிருக்கிறது, 'ஸயன்ஸ்' மாத இதழ். கல்லைத் தின்றாலும் செரித்துக் கொள்கிற குடல், வயசானால் அடம் பிடிக்கிறது. படிகளில் ஏறி இறங்க மூட்டுக்கள் முரண்டு பண்ணுகின்றன. வயசாக வயசாக மூளையின் நிலை எப்படி?

அதன் செயல்பாடுகளின் திறன் குறைகிறது. சுலபமான வேலைகளில் கூடத் தாமதம் ஏற்படும். சிரம சாத்தியமான காரியங்களைத் துல்லியமாய்ச் செய்ய முடிகிறதில்லை. நினைவுகள் மழுங்குகின்றன. சுவச் சோதனைகளில், அவர்களுடைய கவனம் சிதறுவதைக் கண்டறிய முடிகிறது.

ஆனால் 'தினசரி நடவடிக்கைகளில் வயதானவர்களுக்கு எந்த விதமான கோளாறும் ஏற்படுவதில்லை' என்றும் ஆய்வுச் சோதனைகளில் தெரிய வந்திருக்கிறது.

வயதான பிறகு மூளையில் ஏற்படுகிற மாற்றங்களைப் பற்றிக் கடந்த ஐந்து ஆண்டுகளாய் விஞ்ஞானிகள் 'இமேஜிங் டெக்னிக்' முறையில் ஆராய்ந்து வருகிறார்கள்.

மூளைக் கொத்தின் சில பகுதிகள் நாட்பட நாட்பட அளவில் சுருங்கிப் போகின்றனவாம். அறுபது எழுபது வயதானவர்களின் நரம்பு மண்டலச் செயல்பாடுகள், இருபது வயதுக்காரர்களின் செயல்பாடுகளோடு பல நேரங்களில் ஒத்திருப்பதில்லை என்றும் சொல்கிறார்கள்.

பார்வையில் கிடைக்கும் தகவல்களைக் கையாளும் பகுதி மூளையின் பின்புறத்தில் உள்ளது; 'ஆக்ஸிபிடல் கார்டெக்ஸ்' என்னும் மேலுறைப் பகுதி இது. வயதானவர்களானாலும் இந்தப் பகுதி மட்டும் நன்கு பாதுகாப்பாக அப்படியே இருக்கிறதாம். ஆனால் இடப்புறமும் வலப்புறமும் உள்ள மூளையின் முன்புறப் பகுதிகள் (Frontal Lobes) இத்தகைய பாதுகாப்பு எதையும் பெற்றிருக்கவில்லை. இதில் ஒரு குறிப்பிட்ட பகுதி பத்தாண்டுகளுக்கு ஐந்து சதவிகிதம் அளவில் சுருங்குகிறதாம். இருபது வயது முதல் எண்பது வயது வரை இப்படி

# வால் முளைத்த முட்டைகோஸ்!

நிகழ்வதாய்ச் சொல்கிறார்கள்!

நினைவாற்றலுக்குப் பொறுப்பான மூளைப் பகுதி, நாற்பத்தைந்து வயது வாக்கில் தன்னுடைய அளவில் சுருங்க ஆரம்பிக்கிறது; பத்தாண்டுகளுக்கு ஏழு சதவிகிதம் என்கிற அளவில்!

வயது கூடக் கூட, சிக்கலான காட்சிகளைப் பார்த்துப் புரிந்து கொள்வதில் தாமதம் ஏற்படுகிறது. நினைவில் ஒன்றைத் தேக்கி வைத்துக்கொண்டு, பின்னால் தேவைப்படுகிறபோது பயன்படுத்தக்கூடிய ஆற்றலைப் படிப்படியாக இழந்து விடுகிறார்கள்.

1990 ஆம் ஆண்டு முதல், மிகவும் ஆரோக்கியமான மனிதர்கள்

சிலரைக் கண்காணித்து ஜான் கப்ரிலேலியும் அவருடைய குழுவினரும் ஆராய்ச்சி செய்தார்கள். சிலருக்கு மிக நல்ல நினைவாற்றல் இருந்தது. சிலருக்கு அதிகமான மறதி ஏற்பட்டது. நல்ல நினைவாற்றல் உள்ளவர்களின் 'எண்ட்டோரைனல்' மேலுறைப்பகுதி கச்சிதமாய் இருந்தது என்றும், மறதிக்காரர்களுக்கு இது சிறுத்துப் போயிருந்தது என்றும் தெரிய வந்தது.

மூளையின் இடப்பாதிக்கும் வலப்பாதிக்கும் தனித் தனியே சில ஆற்றல்கள் உண்டு. சொற்களை உருப்போடுவது போன்ற மாணவர்களின் நினைவாற்றல் பயிற்சியின்போது, இடப்புற மூளையின் முன்பகுதி விழித்துக் கொண்டு செயல்படும். அதேசமயம், கம்ப்யூட்டர் திரையில் ஒரு புள்ளி எங்கேயிருக்கிறது என்று தேடுகிற



மாதிரியான வேலைகளில் வலப்புற மூளையின் முன்பகுதி செயல்படத் தொடங்கும்.

ஆனால் வயதானவர்களானால், எந்த விதமான நினைவாற்றல் வேலைக்கும் இரண்டு பகுதிகளையும் சேர்த்துப் பயன்படுத்த வேண்டியிருக்கிறதாம். 'இந்த மாறுபாட்டை 1997 ஆம் ஆண்டிலேயே கவனித்துவிட்டோம்' என்றும் 'இதற்கு அப்போது அதிக முக்கியத்துவம் தரவில்லை' என்றும் சொல்கிறார் வட கரோலினாவிலுள்ள டியூக் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த அறிஞர் ராபர்ட்டோ கபேஸா என்பவர்.

'இந்தப் பச்சை நிறப் பையில்தானே பேனாவை வைத்தேன்' என்கிற மாதிரி வாய்விட்டுச் சொல்லிக்கொண்டே பொருளைத் தேடுகிற நிலை வயதானால் ஏற்படுகிறது. அப்போது இடப்புற மூளையின் முன்புறமும் வலப்புற மூளையின் முன்புறமும் சேர்ந்தே உதவிக்கு வருகின்றன.

இளைஞர்கள் புதிர் விளையாட்டில் ஈடுபடுகிற மாதிரியான நேரங்களில் வலப்புறத்தில் கண நேரம் விழிப்பேற்பட்டு உடனே அடங்கி விடுகிறது. ஆனால் வயதானவர்களானால் அத்தனை சீக்கிரம் அடங்குவதில்லை என்றும் கண்டறிந்திருக்கிறார்கள்.

நினைவாற்றல் பயிற்சிகளில் ஈடுபடும் வயதானவர்கள், இரண்டு பகுதிகளையும் பயன்படுத்தி, இளம் பிள்ளைகளைப் போலவே வெற்றிகரமாகச் செயல்படுகிறார்கள்.

முகங்களைப் பார்த்து இளம் வயதினர் அடையாளம் புரிந்துகொள்கிறபோது மூளையின் ஒரு தொகுப்புப் பகுதி விழித்துக் கொண்டு செயல்படுகிறது. வயதானவர்களானால், அவர்களுக்கு உணர்ச்சி வேகத்தைக் கண்காணிக்கும் 'அமிக்டாலா' என்கிற பகுதி உதவிக்கு வருகிறதாம். தங்கள் நினைவாற்றலுக்கு உதவியாக முகபாவத்தையும் சேர்த்து, வயதானவர்கள் பயன்படுத்துகிறார்களாம்.

மூளையின் முன்புறப் பகுதிகளை (Frontal lobes) 'நிர்வாகக் கட்டுப்பாட்டு மையம்' என்றே குறிப்பிடுகிறார்கள். இருபது வயதுக்காரன் எளிதாகச் செய்கிற ஒன்றை எழுபது வயதுக்காரர் மிகவும் சிரமப்பட்டுத்தான் செய்ய முடிகிறது.

இன்றைய கம்ப்யூட்டர் கருவிகளுக்கு முன்னோடியாக நினைக்கும் மனித மூளையைப் பற்றியே இன்னும் ஏராளமாய்த் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

- சுப்ர. பாலன்

29

தன்னிச்சையாக தனது உடல் விஸ்வரூபமெடுத்து விட்டது போல் இருந்தது சரவணனுக்கு. தினவெடுத்த தோள்கள் போருக்குப் பறந்து ஆர்ப்பரித்தன. பல ஜன்மத்து ஏமாற்றமும், இயலாமையும், நெஞ்சை ஆக்கிரமித்ததுபோல மூச்சுத் திணறிற்று. விடலைப் பருவத்திலிருந்து இன்று வரை, தான் அனுபவித்த ஏக்கங்கள் பரிதவிப்புகள் எல்லாவற்றிற்கும் எதிரில் ஆங்காரத்துடன் கண்ணீர் வடித்தபடி நிற்கும் காமாட்சியே காரணம் என்ற எண்ணம் உறுதிப்பட்டு தேகமெங்கும் ஜ்வாலையாக தகித்தது. இவளை என்றோ கொலை செய்திருக்க வேண்டும் - அல்லது அந்தச் சந்திரன் செய்ததுபோல விவாகரத்து செய்திருக்க வேண்டும். குறைந்த பட்சம் பிறந்த வீட்டுக்கு அனுப்பியிருக்க வேண்டும் - வாழாவெட்டி என்கிற பட்டம் அந்தத் திமிரை அடக்கியிருக்கும்.

"அடீ திமிராவா பேசறே?" என்று அவர் ஆக்ரோஷத்துடன் முன்னால் பாய்ந்தார். அவளை நெருங்குவதற்குள் அவள் 'ஓ' வென்று கூக்குரலிட்டாள்.

"அடச்சீ கழுதை! வாயை மூடு!" என்றார் அவர் வெறுப்புடன். "இப்படி அழுது ஆகாத்தியம் பண்ணியே என் வாழ்க்கையை நாசமாக்கி வந்தவடி நீ! வெட்கம் மானம் ரோசம் இருந்தா பேசாம கிட. விலையே போகாத சரக்கை நா கல்யாணங் கட்டிக்கிட்டதுக்கு நன்னியோட இரு."

'விலை போகாதவ நானா?" எனறாள் காமாட்சி ஆத்திரத்துடன். "நூறு வேலி நிலத்தோட வந்தது மறந்து போச்சா? இப்பவும் அந்த நிலத்து சோத்தைத்தான் திங்கறீங்க. நினைவில்லே? அப்பன் கவனிக்காத பஞ்சப் பரதேசியா நின்ன உங்களைப் பிடிச்சு சொத்தையும் கொடுத்தாரே எங்கப்பன், அவங்க ஆவி சும்மா விடாது உங்களை!"

அவளது பேச்சு நாடி நரம்பையெல்லாம் உசுப்பிவிட்டது. கொலை வெறி ஏற்பட்டது. தங்கச் சங்கிலிகள் நிறைந்த அந்தக் கழுத்தை, அந்தச் சங்கிலியாலேயே நெருக்கினால் என்ன என்று தோன்றிற்று. பல்லைக் கடித்துக் கொண்டு,

"சொத்தை எதுக்குக் கொடுத்தான் உங்கப்பன்?" என்றார் ஓங்கிய குரலில். "ஒரு பிடாரியையும் இல்லே சமாளிக்கணும்னு கொடுத்தான்? பொம்பளை இல்லேடி நீ. பணத்திமிரு புடிச்ச, மனசு வக்கரிச்சுப்போன

# மௌனமில் புத்த

மூதேவி."

"வக்கரிச்சுப் போனது உங்களுக்கு. நீங்க பேசின பேச்சுக்கு நா என்னிக்கோ கிளம்பிப் போயிருக்கணும்."

சரவணன் இரண்டு கையையும் அலாக்காக உயரத் தூக்கி. "போயிருக்க வேண்டியதுதானே?" என்றார். "போ, இப்பவும் போயேன், யார் வேண்டாம்னது. புருஷன் தேவையில்லே உனக்குன்னு தானே என் பிள்ளையையே எங்கிட்டேந்து பிரிச்சு வெச்சே. என்னைப் பத்தி இல்லாததையும் பொல்லாததையும் அவன் கிட்டச் சொல்லி, அவன் என்கிட்ட வரவிடாம பண்ணினே! இப்ப அவனுக்குக் கல்யாணம் செய்து வைக்க உனக்கு இஷ்டமில்லே - ஏதாவது சாக்கு சொல்லி



அவள் திடீரென்று அவர் எதிர்பார்க்காமல் அவர்மேல் பாய்ந்தாள். அவரது வாயைப் பொத்தினாள்.

''வேண்டாம் மறுபடியும் ஆரம்பிக்காதீங்க. உங்களுக்குத்தான் புத்திப் பேதலிச்சுப் போச்சு. உங்களுக்குள்ளே ஏதோ பிசாசுதான் இருந்துகிட்டு இப்படிப் பேச வைக்குது.''

இரும்புப் பிடியாக இருந்த அந்தக் கையை அவர் வெடுக்கென்று அகற்றினார். ''ஆமாம் பிசாசுதாண்டி நீ. அதான் வெறி பிடிச்சு அலையறே. வயசு வந்த பையனைக் கட்டிக்கிறதும், முத்தமிடறதும்..., அது என்ன உறவுடீ அது! ஒரு நாள் கூட என்கிட்ட காண்பிக்காத நெருக்கம்னு எனக்குத் தோணுமா தோணாதா?''

# நிஜம்

**• வாஸந்தி**

காமாட்சி மடேர் மடேர் என்று தலையில் அடித்துக் கொண்டாள்.

''வேண்டாம், வேண்டாம், மேலே பேசாதீங்க. வாய் கூசல்லே உங்களுக்கு இப்படிப் பேச? ஏற்கெனவே பட்ட அடிமறந்து போச்சா? உங்க பேச்சைக் கேட்டு வெறுத்துப் போய் ராஜா பேசினது மறந்து போச்சா?''

திடீரென்று ஒரு மாபெரும் சோர்வு அவரை ஆட்கொண்டது. அடக்க அடக்க தம்முள் ஏன் இப்படிப்பட்ட ஒரு வெறி பொங்குகிறது என்று திகைப்பேற்பட்டது.

எல்லாப் பெண்களையும் ஒதுக்கறே!''

காமாட்சி அதிசயமாக வாயை மூடிக் கொண்டு நின்றாள். குற்ற உணர்வு இல்லாவிட்டால் வாய் திறக்காமல் இருப்பாளா என்று அவருக்குத் தோன்றிற்று.

''ஏன் வாயை மூடிக்கிட்டு நிக்கறே? உண்மையா இல்லையா அது? சொல்லு! நா மறுபடியும் சொல்றேன் கேட்டுக்க. நீ அவங்கிட்ட வெச்சிருக்கிற நெருக்கம் யோக்கியமானது இல்லே.''



**"பாங்குக்கு வந்து கடன் கேட்கிறது தப்பில்லை; அதுக்காக வாராக் கடனா ஐம்பதாயிரம் கொடுங்கன்னா கேட்குறது?"**

**- எஸ்.மோகன்**

ஏதோ ஒரு பைசாசம் அவரையறியாமல் அவருள் புகுந்து கொள்கிறது. அல்லது நிரந்தமாக வாசம் செய்கிறது. பதினாலு வயதில் சென்னைக் கடற்கரையில் அடித்த காற்றோடு காற்றாய் அவருள் புகுந்திருக்க வேண்டும் - காமாட்சியே அதற்குத் தீனி போட்டு வளர்த்திருப்பதான எண்ணம் விலக மறுத்தது. மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க, எதிரில் நிற்கும் இந்த ஸ்திரீயுடன் எப்படி வாழ்ந்து வருகிறோம் என்று வியப்பேற்பட்டது. இவள் வித்யாசமாக இருந்திருந்தால் நானும் வேறு மாதிரி இருந் திருப்பேன். என் மகனுடன் இயல்பான, அன்பான உறவு மலர்ந்திருக்கும். 'எனக்கு இருந்த மகன் செத்தாச்சுன்னு நினைச்சுக் கறேன்' என்று அனல் கக்கும் வார்த்தை களைக் கக்க நேர்ந்திருக்காது.

காமாட்சியிடம் இதேபோல அன்று கத்தியபோது ராஜா திடும்மென்று எதிரில் நிற்பான் என்று எதிர்பார்க்கவில்லை. அவன் கண்களில் மண்டியிருந்த அதிர்ச்சியும், வெறுப்பும், அவன் கத்தியதும் இன்னும் நினைவில் நிற்கிறது.

"அப்பா, உங்க பிள்ளை நான்னு சொல் லிக்கவே நா வெக்கப்படறேன்! உங்க சந்தேகத்துக்கும் விவஸ்தை வேண்டாம்?"

அன்றும் இப்படித்தான் வேதாளம் ரௌத்திரத்துடன் உச்சிக்கு ஏறிற்று. "வேண் டாமே! நீ என் பிள்ளைன்னு சொல்ல வேண்டாம். உண்மையிலே நீ யாரோட பிள்ளையோ, அந்த ஜம்புலிங்கத்துடைய பிள்ளையாகவும் இருக்கலாம்!"

ராஜாவின் முகத்தில் தோன்றிய அதிர்ச்சி தனக்கு உற்சாகமளித்தது இப்பவும் சரவணனுக்கு நினைவுக்கு வந்தது.

"போடா போ, நீ எனக்குக் கொள்ளி போட வேண்டியதில்லே - எனக்குப் பிள்ளையே இல்லே - நீ வீட்டை விட்டுப் போனாதான் இந்த வீட்டுக்குக் கௌரவம்!"

"ரொம்ப சரி, நா போறேன்!"

"போ! போ! திரும்பி வராதே."

ஒரு வினாடிப் போதில் அவனை விரட்டிய பைசாசம் - இன்னும் உள்ளே இருந்தது. எதுவும் மாறவில்லை, காமாட்சி யின் சாகசங்கள் மாறாததால். மறுபடி மகனை மடியில் முடிந்து கொள்ளும் எத்தனத்தில் இருக்கிறாள்.

"எனக்கு எதுவும் மறக்கல்லே" என்றார் அவர் நிதானமாக. 'நீதான் மறந்துபோனவ மாதிரி தெரியுது. பேராசைப் பிடிச்சவ, நீ. பிள்ளையைத் தலைப்பிலே முடிஞ்சுக்க ஆசைப்படறே. எந்தப் பொண் மேலயும் அவன் கவனம் போயிறக்கூடாதுன்னு வெறிபிடிச்சு நிக்கறே - நீ சூன்யக்காரியா இருக்கணும் - அதனாலதான் அவனுக்கு அவன் பிரியம் வெச்ச பொண் கூட மறந்துபோச்சு."

...ராஜா மெல்ல எழுந்தான். வாசல் இருண்டிருந்தது. பிரமை பிடித்தவன்போல் நடந்தான். ஜடமாகிப் போயிருந்தன உடம் பும் மனசும். அவன் எந்தவித யோசனையும் அற்றவன்போல கைப்பெட்டியுடன் வீட் டின் முன் தோட்டத்தைக் கடந்து திறந் திருந்த காம்பவுண்டு வாசலைத் தாண்டித் தெருவிற்கு வந்தான். ஏன் தெருவில் நிற்கிறோம் என்று சற்று நேரம் யோசித்தபடி, அவன் திரும்பி அந்த இரும்பு கேட்டையும் அதற்குப் பின்னால் தெரிந்த அந்த ப்ரும் மாண்ட பங்களாவையும் பார்த்தான். மிகப் பெரிய ஜ்வலையை ஸ்பர்சித்துவிட்டது போல உடம்பு தகித்தது. அந்த ஜ்வாலையில் அந்த வீடே கனன்றதாகப்பட்டது. வெறுப்பே ஒரு ஆணையும் பெண்ணையும் பிணைக்கும் பந்தமாக இருக்க முடியும் என்பது அசாதாரணமாகத் தோன்றிற்று. அந்த பந்தத்தில் என்ன ஜனிக்கும் என்று அவன் தனக்குள் கேட்டுக் கொண்டான். ஆக்கபூர்வமாக எதுவும் விளையமுடியாது என்று மனசு தர்க்கித்தது. பூஜ்யத்திலிருந்து எதுவும் ஜனிக்காது. ஆனால் அங்கிருப்பது பூஜ்யமில்லை. ஞானசூன்யம். ஆனால்

சூன்யமில்லை. அதை வியாபித்திருப்பது ஆக்ரமிப்பு சக்தி கொண்ட வெறுப்பு. அது நிஜம். பிரபஞ்சத்தைப் பொசுக்கக் கூடிய எதிர்மறையான எண்ண அலைகள் கொண்ட கருவூலம். அதன் தாக்குதலில் பார்வைகள் வக்கரித்துப்போகும் - உறவுகள் கசந்துபோகும் - ஒவ்வொரு கணமும் மான சீகக் கொலைகள் நடக்கும். உளுத்துப் போன வீடுகளில் செல்லரித்துப் போன ஜீவன்கள். கடவுளே! எத்தனை மகத்தான வாழ்க்கை விரயம்! அதிலிருந்து விடுபட முடியாத ஜோடியின் எத்தகைய சோகம்! அந்த வெறுப்புக் கங்குகளிலிருந்து வெளியேறினால்தான் எனக்கு விமோசனம்...

திடீரென்று உலுக்கப்பட்டதுபோல அவன் இருளில் நின்றான். மனசு கனக்க உடல் மட்டும் இலேசாகத் தன்னிச்சை யுடன் நகர்ந்த இந்தத் தருணம் ஏற்கெனவே அனுபவித்த ஒன்றாகத் தோன்றிற்று. வாழ்வைப் பற்றின, உறவுகளைப் பற்றின கேள்விகள் மனத்தை வாட்ட, தெருவில் விரையும் வாகனங்களை இதே விதமான பிரமையுடன் பார்த்தது நினைவுக்கு வந்தது. அடி வயிற்றிலிருந்து சொல்லத் தெரியாத தாபம் பொங்கிப் பொங்கி எழுந்ததும் ஈடு செய்ய முடியாத விரயத்தை, மதிப்பற்ற இறப்பை நேரில் கண்டதுபோல மனசு பிரலாபித்ததும், ஏன் ஏன் என்ற கேள்வி ஈட்டியாய்த் துளைத்து கண்ணீர் சுரப்பி களை வெடிக்கச் செய்ததும், இனிமேல் உறவு என்று சொல்லிக் கொள்ள எந்த ஆதாரமுமில்லை என்று சமுத்திர அலை களின் இரைச்சலுக்கு எதிரில் அமர்ந்து கண்ணீர் விட்டதும் எல்லாம் புகையிருட் டாய் நினைவுக்கு வந்தது.

அவன் கனவில் நடப்பவன்போல நடந்தான். அவன் அருகில் தயங்கிக் கொண்டு ஒரு ஆட்டோ நின்றதும் கழுத் தைப் பிடித்து நகர்த்தப்பட்டதுபோல அதில் அவன் ஏறிக் கொண்டான். அலுவலக விலாசத்தையும் இடத்தையும் சொல்லி கண்மூடிப் பின்னால் சாய்ந்தபோது ஒரு யுத்த களத்திலிருந்து புறமுதுகிட்டுத் திரும்புவதுபோல களைப்பேற்பட்டிருந்தது. தோல்வியை ஏற்றுக் கொண்டதுபோல. வாழ்வின் மிகப் பல ரகசியங்கள் தன் புலனுக்கு எட்டாமலே போகுமோ என்கிற ஆற்றாமையும் பரபரப்பும் ஏற்பட்டது. அலுவலகத்துக்கு முன் நின்ற ஆட்டோவி லிருந்து அவன் இறங்குவதை வாட்ச்மேன் கேள்விக் குறியுடன் பார்க்க, ராஜா ஒரு விநாடி விழித்துவிட்டு சமாளித்துக்கொண்டு "ஒரு அவசர வேலை இருக்கு ஆறுமுகம், வாசல் திறந்திருக்கா?" என்றான்.

"திறந்திருக்கு சார், இன்னும் பூட்டல்லே" என்றான் ஆறுமுகம் பிரசன்னத்துடன்.

"குட், நா என் காபின்லே கொஞ்ச நேரம் வேலை செய்வேன். எத்தனை நேரமாகும்னு சொல்ல முடியாது."

"பரவாயில்லே சார். நீங்க செய்யுங்க. டீ, காப்பி எதுனாச்சும் வேணும்னா கொண்டு வரவா?"

"சரி கொண்டு வா. தாங்க்ஸ்" என்று அவ னிடம் ஐம்பது ரூபாயை நீட்டி "ஏதாவது சாப்பிடவும் கொண்டு வா" என்றான்.

லிஃப்டில் நுழைந்து அலுவலகத் தளத்தில் வெளியேறித் தன்னுடைய காபி னுக்குள் நுழைந்து கம்ப்யூட்டரின் எதிரில் அமர்ந்தபோது, இதுவரை உணர்ந்தறியாத பரபரப்பு அவனை ஆட் கொண்டது. கம்ப்யூட்டரின் விசையைத் தட்டியதும் அலுவலகத்திற்கு எதற்காக வந்தோம் என்று திகைப்பு ஏற்பட்டது. வீட்டுச் சூழலிலிருந்து தப்பிக்க நினைத்து, இங்கு வந்திருக்கலாமோ என்று குழப்பமேற்பட்டது. மூளையே இயங்காமல் உறுப்புகள் தன்னிச்சையாகச் செயல்படுவதுபோல், அவனுள் பீதி எட்டிப் பார்த்தது.

கம்ப்யூட்டர் எதிரில் அமர்ந்ததும், ஆறுமுகத்திடம் வேலையிருப்பதாகச்

---

"கல்யாணத்துல மாப்பிள்ளை வீட்டுக் காரங்களுக்கும், பொண்ணு வீட்டுக்காரங் களுக்கும் திடீர்னு ஒரே சண்டை!"

"அடடா! அப்புறம் மாப்பிள்ளைக்கு கால் கட்டுப் போட்டீங்களா இல்லையா...?"

"போட்டோமே! ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில...!"

- வி. சாரதிடேச்சு



சொல்லி டிபன் காப்பி வாங்கி வரச் சொன்னதும்கூட அந்தத் தன்னிச்சைச் செயலுக்கு சால்ஜாப்பு கற்பித்ததாகத் தோன்றிற்று. படபடக்கும் மார்பை மெல்ல தேய்த்துக் கண்களை மூடி, நீண்ட சுவா சத்தை சற்று நேரம் இழுத்ததும் மெல்லிய அமைதி ஏற்பட்டது. பிறகு அவன் கை போன போக்கில் கீ போர்டில் அட்சரங் களைத் தட்டினான். வலைத் தளத்துக்குச் சென்றுவிளங்காத பிரமைகளின் அழுத்தத் தில் எந்தத் தேடுதலுக்கோ தயாரானான்.

'உனது பாஸ் வர்ட் யாருக்கும் தெரியாத தால் உன் பிராஜெக்ட் பக்கங்களே காணா மல் போய்விட்டன' என்று ராஜீவ் சுக்லா சொன்னது நினைவுக்கு வந்தது.

'உனக்கும் இப்போது ஞாபகமிருக்காது'.

திடீரென்று உந்தப்பட்டவன்போல ஒரு வலைப் பக்கத்தை அவன் தேடினான். பாஸ்வர்ட் பாஸ்வர்ட் என்று நட்சத்திர சிமிட்டலாய் மானிட்டர் கண்சிமிட்டுகை யில் விரல்கள் மனக்குகையில் புதையுண் டிருந்த அட்சரங்களை வாகவமாக அடித் தன. அவனது வெப் பக்கம் விரிந்தது. நம்ப முடியாத அதிசயம் நடந்தது போல அவன் மார்பு படபடத்தது. கண்கள் பனித்தன. அட்சரம் அட்சரமாகக் கோத்துச் சங்கிலி யைப் போல ராஜமோகன் சரவணனின் வலைப் பக்கம் பின்னிக் கொண்டு விரிந்தது. யாருடைய அந்தரங்கத்தையோ ஊடுருவும் தயக்கத்துடன், அவன் ஆர்வம் பொங்க, கண்கள் விரியப் பார்த்தான். அவனுடைய உருவம் கிராஃபிக்ஸில் கோலமிட்டு முழுமை பெற்றது. 'வாழ்க்கைத் துணைவி' என்று சகுந்தலாவின் உருவம் தோன்றி பூவாய் மலர்ந்தது. 'வாரிசு' என்று ஒரு குழந்தையின் முகம் நிமிர்ந்து பொக்கை வாய்ச் சிரிப்பு சிரித்தது. அவனை நோக்கித் தாவுவதுபோல் இருந்தது. டாட்டா என்று கையசைத்த கிருஷ்ணவிக்ரகம் எட்டிப் பார்த்தது. அவன் பரபரப்புடன் அடுத்து, அடுத்து என்று, பக்கங்களைப் பார்க்க மௌஸை அழுத்திக் கொண்டு நகர்த்த, ரகசியப் பரிமாணம் விரிய ஆரம்பித்தது. அவன் இரண்டு கைகளையும் உயரத் தூக்கி 'ஹே' என்று சந்தோஷக் கூக்குரலிட்டு புன்னகைக்கையில் ஆறுமுகம் டிபன் காப்பியுடன் வந்தான். அவனை அணைத்துக் கொண்டு கூத்தாட வேண்டும்போல இருந்தது.

"ஆறுமுகம் கையைக் குடு!" என்று வலிந்து அவன் கையைப் பிடித்து குலுக் கினான். "தொலைஞ்சு போச்சுன்னு நினைச்சிருந்தது கிடைச்சிட்டது" என்றான். ஆறுமுகம் காரணம் புரியாமலே "ரொம்ப சந்தோஷம் சார். சாப்பிட்டுட்டு வேலை பாருங்க" என்று சொல்லி விட்டு அவ னுடைய சந்தோஷத்தில் பகிர்ந்து கொள் ளும் பாவனையில் கம்ப்யூட்டரைச் சற்று நேரம் பார்த்துவிட்டு நகர்ந்தான். ஆறுமுகம் கொண்டு வந்து வைத்ததைச் சாப்பிட்ட படியே, உற்சாகத்துடன் கம்ப்யூட்டரில் நகர்ந்த வரிகளைப் படிக்கும்போது மனசு ஆனந்தத்தில் இறக்கை கட்டிக் கொண்டு பறந்தது. அடுத்தடுத்த பக்கங்களில் என்ன வரப்போகிறது என்று துல்லியமாக உணர்ந்து கணித்தது. காப்பியை உறிஞ்சுகை யில் பிராஜெக்டின் கடைசிப் பக்கம் விரிந்தது. அவன் அதையே சற்று நேரம் பார்த்தபடி இருந்தான். 'ஓ, மை காட்!' என்று மெல்ல சொல்லிக் கொண்டான் - அந்தப் பக்கத்தில் அவனது வாழ்வு உறைந்து நின்றிருந்தது. கடைசி வரிக்குப் பிறகு பின் குறிப்பு நின்றது. ஆவணம் போல. 'இந்த சந்தோஷத்தை நான் சக்குவிடம் முதலில் பகிர்ந்து கொள்ள வேண்டும், வாசகம் அவன் கையைப் பிடித்து அழைத்தது, முந்தைய ஜென்மத்துக்கு. அதனுடன் அவன் நடந்தான். மூன்றாம் மனிதனைப் போல்... வலைப் பக்கத்தை மூடிவிட்டு அவன் எழுந்திருந்ததும் சகுந்தலாவின் அலுவலகத் துக்குச் சென்று அவளிடம் தன் பிராஜெக்ட் வேலை முடிந்ததைப் பற்றி நேரில் சொல்ல

## நடுரோட்டில் வயல்!

தாய்லாந்து கிராமமான 'பான் நா தோ'வில் முக்கியமான சாலை ஒன்று மழைக்குப் பின் சதுப்பு நிலம் மாதிரி சொத சொதவென்று ஆகிவிட்டது. தாய் லாந்து, இந்தியா மாதிரி கிராமங்களில் வாழும் நாடு. 65 சதவிகிதம் விவசாயப் பொருட் களை ஏற்றுமதி செய் யும் நாடு. அற்புதமான சாலைகளால் கிராமங் களை நகரங்களோடு இணைத்து விவசாயப் பொருட்களின் ஏற்றுமதியை ஒவ்வொரு வருடமும் 12 சதவீதம் அதிகரித்த நாடு. அது போன்ற நாட்டில் சாலை சரியாக இல்லை என்றால் மக்கள் சும்மாயிருப்பார்களா? சாலை யைச் செப்பனிடச் சொல்லி பலமுறை அலைந் தார்கள். அதிகாரிகளுடன் முட்டிப் பார்த்தார்



கள். இறுதியில் போராட்டமே வழி என்று முடிவு செய்தார்கள்.

சாலை உபயோகப்படுத்த முடியாமல் வயக் காட்டு நிலம் மாதிரி சேறும் சகதியுமாய் இருந்ததால் அந்த நிலையை முன்னிறுத்திக் காண்பிக்க, கிராமத்திலுள்ள விவசாயிகள் எல் லோரும் ஒன்று கூடி அந்தச் சாலையில் நாற்று நட ஆரம்பித்தார்கள். சுற்றியிருந்த வயலுக்கும் அதற்கும் வித்தியாசம் தெரியாமல் போய்விட் டது. வாகனங்கள் நின்றன. இந்தப் போராட்டத் தில் கவரப்பட்டு பத்திரிகையாளர்கள், அந்தக் காட்சியை முதல் பக்கத்தில் வெளியிட்டார்கள். அச்செய்தி எல்லோரையும் கவர்ந்து பாராளுமன் றத்தில் வேடிக்கையான விவாதம் கூட நடந் தது. அந்தத் தொகுதி எம்.எல்.ஏ. அதனால் உசுப்பேற்றப்பட்டு எல்லாரையும் முடுக்கிவிட, அடுத்த சில தினங்களில் அதிகாரிகள் அடித் துப் பிடித்துக் கொண்டு சாலை போட்டிருக் கிறார்கள். நம்மூரில் முடியுமா?

**- ஆனந்த்**

விரைந்ததையும் கண்ணெதிரில் பார்க்க முடிந்தது. பிடி கொள்ளாத மகிழ்ச்சியில் இதயம் பூரித்ததும் கார் ஓட்டுகையில் மனசு மிதந்ததும், 'சக்கு ஐ மேட் இட்!' என்று வாய் ஜபித்ததும்.. அவளால் மட்டுமே தனது உணர்வுகளைப் புரிந்து கொள்ள முடியும் என்று நினைத்ததும் - ...

அதன் பிறகு? ஒரு திரை தொங்கிற்று. கறுப்புத் திரை. உழைப்பின் அசதியிலோ, பிடி கொள்ளாத பூரிப்பிலோ நெஞ்சு உண்மையிலேயே வெடித்திருக்க வேண்டும். வெடித்த தருணத்தில் எந்த பூத கணங்களின் சாபமோ ஏற்பட்டிருக்க வேண்டும் - ஸை காட்! என்றான் அவன் நம்பமுடியாத திகைப்புடன். கண்களிலிருந்து நீர் வழிய ஆரம்பித்திருப்பதைக் கண்டு, அதை நிறுத் தும் வழி தெரியாமல் கைகளால் முகத்தை மூடிக் கொண்டான். முதுகு குலுங்க ஆரம் பித்தது. அதை நிறுத்த அவன் முயற்சிக்க வில்லை. சுமக்கும் சுமையை எல்லாம் நெஞ்சு விதிர்த்து உள்ளம் சொரியும் கண்ணீர் வழியாகத்தான் இறக்க முடியும் என்று தோன்றிற்று. அந்தக் கடைசி பக்கம் இன்னமும் எதிரில் நின்றிருந்தது. மறுபடி விதியின் ஏதேனும் ஒரு குரூர விளையாட்டி னால் இந்தப் பக்கங்கள் தொலைந்து போனால் என்ன செய்வது என்ற பயம் அழுத்த அவன் ஒரு புதிய ஃப்ளாப்பியைப் பொருத்தி அதில் எல்லா வற்றையும் இறக் கிப் பிரதி எடுத்து, தனது கைப்பெட்டியில் வைத்துக் கொண்டான். மானிட்டருக்குத் திரும்பி மீண்டும் முதல் பக்கத்துக்குச் சென்றபோது சகுந்தலாவின் முகம் விரிந்தது. வாழ்க்கைத் துணைவி என்கிற குறிப்புடன். நம்ப முடியாத சினிமாக் கதைகளை இரு வரும் கேலி செய்து சிரித்தது நினைவுக்கு வந்தது. தனது வாழ்க்கையில் நடந்திருப் பதைவிட மோசமான சினிமாத்தனம் எங்கும் கேட்டிருக்க முடியாது என்று அவன் நினைத்துக் கொண்டான். இருண்ட தெரு மூலையில் வாழ்வின் தாத்பர்யத்தைப் பற்றி எழுந்த கேள்வியில் சில மணி நேரங்களுக்கு முன்பு, தான் தடுமாறி நின்ற கோலம் நினைவுக்கு வந்தது. இப்போது எல்லா கேள்விகளும் பரிதவிப்பும் பழங் கனவாய் மெல்லச் சரிந்தன. மிகப் பெரிய சுமை ஒன்று அவனுடைய முயற்சி இல்லா மலே, இனி உனக்கு நான் தேவையில்லை என்பதுபோல, எங்கேயோ இறங்கிக் கொண்டுவிட்டதை அவன் உணர்ந்தான்.

டெலிபோன் மணி ஒலித்தது. அம்மா வின் குரல் மறுமுனையில் கேட்டது.

"ராஜா, 12 மணிக்கு மேல ஆயிடுச்சு, இன்னுமா ஆபீஸ்லே இருக்கே?"

"ஆமாம்" என்றான் அவன் சோர்வுடன். "ஒரு முக்கியமான வேலை இருக்கு. முடிக்கணும்."

"சாப்பாடு?"

"இங்கேயே சாப்பிட்டாச்சு."

"அப்படியென்ன வேலைடா?" என்று அம்மாவின் குரலில் சந்தேகம் தட்டிற்று. "எப்ப வருவே?"

"நாளைக் காலை ஃப்ளைட்லே டில்லிக் குப் போகணும். இங்கிருந்தே போயிடுவேன்."

"டில்லிக்கா?" என்றாள் காமாட்சி வியப் புடன். 'பெட்டி ஒண்ணும் பாக் செய்ய வேண்டாமா?"

"வேண்டாம், தேவையில்லே." என்றான் அவன்.

"உடனே வந்துடறியாக்கும்!"

அவன் சிறிது நிதானித்து "மாட்டேன்" என்று போனைத் துண்டித்தான்.

சற்றுப் பொறுத்து போன் மறுபடி அடித் தது. அவன் எடுத்தான். அம்மாவின் குரல் ஒலித்தது. அவன் ரிஸீவரை எடுத்துக் கீழே வைத்தான். இன்டர்காமில் வாட்ச் மேனைக் கூப்பிட்டு, நாலரை மணிக்கு டாக்ஸி வேண்டும் என்றான்.

மேஜையில் கவிழ்ந்திருந்த ரிஸீவர் முனை யில் சற்று நேரம் காமாட்சியின் குரல் ஒலித்த வண்ணம் இருந்தது.

(முற்றும்)

அமீனா லாவல். சாவை எதிர்பார்த்துக் காத்திருக்கும் இந்தப் பெண்மணிக்கு ஆதரவாய் உலகளாவிய இயக்கம் ஒன்று தொடங்கியிருக்கிறது. எட்டுமாதக் குழந்தைக்குத் தாயான, இந்த முப்பது வயதுப் பெண்மணி அவள் வாழும் நைஜீரியாவின் விநோத சமூக நெறிகளின் படி, ஒரு குற்றவாளி.

அமீனா விவாகரத்து செய்யப்பட்டவர். விவாகரத்துக்குப் பின்னர் இன்னொருவருடன் அவருக்கு நட்பு ஏற்பட்டது. ஒரு வருடம் தொடர்ந்த அந்தக் காதலினால் கர்ப்பமுற்றார். இதுதான் அவர் செய்த குற்றம். இந்த அங்கீகரிக்கப்படாத உறவுக்கு வடக்கு நைஜீரியாவில் உள்ள இஸ்லாமிய விதிகளின்படி adultry குற்றத்தின் கீழ் அவருக்கு விதிக்கப்பட்டது மரண தண்டனை. உலகம் பூராவும் அதிர்ச்சி அடைந்தது அந்த மரண தண்டனை தீர்ப்புக்காக அல்ல. தண்டனையைச் செயல்படுத்தவிருந்த முறைக்காக. அமீனா கற்களால் அடித்து கொல்லப்பட வேண்டும் என்பதுதான் தீர்ப்பு. தீர்ப்பு செயல்படுத்தப்படும் முறை எப்படித் தெரியுமா? அமீனா முதலில், மண்ணில் தலை மட்டும் வெளியே தெரியும்படி புதைக்கப்படுவார். அதன் பிறகு கூடியிருக்கும் ஆண்கள் மட்டும் கற்களால் அவள் தலையை அடித்துப் பிளந்து கொல்லுவார்கள். ஓட முடியாது. கல்லடியிலிருந்து காப்பாற்றிக் கொள்ள கைகளால் முகத்தைக் கூட மூடிக் கொள்ள முடியாது. நினைத்தாலே நெஞ்சு பதறும் அந்த காட்டுமிராண்டித்தனமான தீர்ப்பை எதிர்த்துதான் உலகெங்கும் பெண் உரிமை மற்றும் மனித உரிமை இயக்கங்கள் அமீனாவுக்கு ஆதரவாய்த் திரண்டிருக்கின்றன.

முதலாவதாக இது அடல்ட்ரி தானா என்பதே சர்ச்சைக்குரியது. தன் கணவன் தன்னை விவாகரத்து செய்தபிறகே, யாஹறாய் என்பவனுடன் ஒரு வருடமாய் பழக்கம் வைத்துக் கொண்டிருந்த அவர், அடல்ட்ரி என்னும் குற்றத்தின் பேரில் எப்படித் தண்டிக்கப்படலாம் என்பதே தெளிவாகவில்லை. இதில் அநியாயம் என்னவென்றால் இந்த கர்ப்பம் அம்பலமானதும், கிராமத்துப் பெரியவர்கள் பஞ்சாயத்து மாதிரி கூட்டிய கூட்டத்தில் யாஹறாய், அந்தக் குழந்தைக்குத் தகப்பன் தான்தான் என்றும் அமீனாவை காப்பாற்றுவதாகவும் ஒப்புக் கொண்டிருக்கிறான். ஆனால் அதன் பிறகு, அவன் குடும்பத்தார் மிரட்டலுக்குப் பயந்து தன் வாக்கை மாற்றிக் கொண்டான். போலீஸ் அமீனாவைக்

# அரக்கர்கள் பிடியில் அமீனா!

கைது செய்து, அந்த மாநில கோர்ட்டில் வழக்கு, விசாரணைக்கு வந்தவுடன் அமீனாவுடன் தான் எந்தச் சம்பந்தமும் வைத்துக் கொள்ளவில்லை என்று சத்தியம் செய்ததின் பேரில், அவனை வழக்கிலிருந்து விடுவித்து விட்டார்கள். இஸ்லாமியச் சட்ட விதிகளின்படி, அந்த வாக்கு மூலம் போதுமாம் அவனைக் குற்றச்சாட்டிலிருந்து விடுவிக்க!!!

அமீனாவுக்கு இந்தத் தீர்ப்பு வழங்கப்பட்டது மார்ச் இரண்டில். தன் தரப்பு நியாயங்களை, உரிமைகளைச் சொல்ல அமீனாவுக்கு வாய்ப்பளிக்கப்படவில்லை. நீதிபதிகள். "உன் விவாகரத்துக்குப் பிறகு நீ வேறு யாருடனாவது உறவு வைத்துக் கொண்டாயா?" என்று கேட்டு அமீனா அதை ஒப்புக் கொண்ட மாத்திரத்தில், அவளுக்கு மரண



தண்டனை விதித்துவிட்டார்கள். தீர்ப்பு வழங்கப்பட்டவுடன், நைஜீரியாவில் உள்ள மனித உரிமைக் கழகங்கள் வெகுண்டு எழுந்தன. அமீனா சார்பில் ஒரு வழக்கறிஞரை ஏற்பாடு செய்தன. அமீனாவைக் காப்பாற்ற போராடும் வழக்கறிஞரும் ஒரு பெண்தான். முதல் நிலை ஷரிய நீதிமன்றம் வழங்கிய தீர்ப்புக்கு எதிராக முறையீடு செய்தார்கள். அந்த முறையீட்டிற்குப் போன மாதம் தீர்ப்பு வந்தது. அமீனாவுக்கு ஒரு பேரிடி காத்திருந்தது. அமீனாவின் முறையீடு நிராகரிக்கப்பட்டு மாநில நீதிமன்றம், அந்தக் காட்டுமிராண்டி கல்லடி தீர்ப்பை ஊர்ஜிதம் செய்திருக்கிறது. உயர்நீதிமன்றத்திடம் முறையிட, அமீனாவுக்கு இன்னொரு ஒரு மாதம் அவகாசம் தந்திருக்கிறார்கள்.

இதற்கிடையில் உலக மக்களின் பார்வை அந்தப் பெண்மணியின் மேல் திரும்பி அவர் சார்பில் இலட்சக்கணக்கில் நைஜீரிய அதிபரிடம் வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள். 110 மில்லியன் ஜனத்தொகை கொண்ட நைஜீரியா, மத ரீதியாய் பிளவுபட்ட நாடு. நைஜீரியாவின் வடக்குப் பகுதிகளில் உள்ள 12 மாநிலங்கள் இஸ்லாமையும், தெற்குப் பகுதிகள் கிறிஸ்துவ மதத்தையும் தழுவிய நாடு. இஸ்லாமிய நீதிகள் அமுலில் இருப்பது வட மாநிலங்களில் மட்டும். அந்தக் கற்காலத்து நீதி முறையை அவர்கள் அமலுக்குக் கொண்டு வந்ததே 1999ஆண்டுதான். நைஜீரிய அதிபர், கிறிஸ்துவர் என்பதால், இந்த வம்பில் மாட்டிக் கொள்ளாமல், "என்னால் கண்ணீர்விடத்தான் முடியும் ஆனால் காப்பாற்ற முடியாது" என்று உருக்கமாகப் பேசிவிட்டு கைகழுவி விட்டார். ஆனால் அம்னெஸ்டி இண்டர்நேஷனலும், மெர்டன் அம்னெஸ்டியும் இந்தப் போராட்டத்தை இணையத்தின் மூலம் உலகெங்கும் பரப்பியிருக்கின்றன. அமீனாவுக்குக் கருணை காட்டும்படி கேட்டுக் கொள்ளும் கருணை மனுவை www.mertonai.org/amina என்ற தளத்தில் வைத்து, உலக மக்களை நைஜீரிய அதிபருக்கு மனு அனுப்பும்படி பணிக்கிறது.

அமீனா தன் குழந்தைக்குத் தாய்ப்பால் ஊட்டும் காலம் வரை, அவளின் தண்டனையைத் தள்ளிப் போட்டிருப்பதால், ஒரு வகையில், அமீனாவை இப்போதைக்கு காப்பாற்றிக் கொண்டிருப்பதே அந்தக் குழந்தைதான்.

— ஆனந்த் ராகவ்

# 23

"ராதாகிருஷ்ணன் இங்க வந்து புள்ள பக்கத்துல உட்கார்ந்துகோங்கோ, அம்மா நீயும் வா" என்று ரேவதியைப் பார்த்து கூப்பிட ராதாகிருஷ்ணனும், ரேவதியும் கிளம்பி ஆளுக்கொரு பக்கமாய் மகனருகே உட்கார்ந்துகொண்டார்கள்.

அவன் கம்பீரமாய் ராதாகிருஷ்ணனைப் பார்த்தான்.

இதுவரை ராதாகிருஷ்ணனை அப்படி யாரும் ஒரு அலட்சியத்தோடு உற்றுநோக்கி சிரித்ததில்லை. ரேவதியைப் பார்த்து பரிவோடு தலையசைத்தான்.

"இது கடன். இது கடன்" என்று ரேவதியை சங்கரய்யருக்குச் சுட்டிக் காட்டினான்.

"ஓ... அது கர்மா. இது கடன். என்ன வித்தியாசம்?"

சங்கரய்யர் கேட்டார்.

"கோவிச்சுண்டேன். அடிச்சு உதைச்சேன். இப்ப பிள்ளையா பொறந்துட்டேன். இவா எனக்கு உதவி செய்தா, நிறைய சாதம் போட்டா. அது கடன். அதை அடைக்கறதுக்கு பிள்ளையா வந்திருக்கேன்."

"எப்போ இது?"

"ரொம்ப நாள் முன்னாடி."

"எப்போன்னு சொல்ல முடியுமா?"

"சொல்லி என்ன? எதுவும் சொல்ல வேண்டாம். நீரே அவர். அவரே நீர். நீர் இவானை ஆசிர்வாதம் பண்ணும்."

"உனக்குச் சாதம் போட்ட ரேவதி வந்திருக்காளே. நீ ஏதாவது பண்ணேன். அவளுக்கு ஏதாவது தாயேன்" என்று சங்கரய்யர் மிருதுவான குரலில் அவன் காதோரம் சொல்ல, உற்று ஆழமாகப் பார்த்துக்கொண்டார்கள்.

"இவர் மாறப் போறார். ரொம்ப அழகா மாறப் போறார். இப்போ காய். முகர்ந்து பார்த்தாக்கூட கசக்கறது. கொஞ்ச நாள்ல கனியும். நன்னா கனியும். தித்திக்க இருக்கும். வீடு முழுக்க வாசமா இருக்கும்" என்று சொன்னான்.

மெல்ல அவர் தோளை அணைத்துக் கொண்டான்.

ராதாகிருஷ்ணன் நின்றால் பயப்படுகிற அந்தப் பிள்ளை, அப்பாவைத் தோழன் போல அணைத்துக்கொண்டது.

ராதாகிருஷ்ணன் தன்னையறியாமல் மகனை நோக்கிக் கைகூப்பினார்.

அவன் சிரித்தான். அவர் கைகளை மெல்லப் பிரித்துவிட்டு "வேண்டாம்" என்று சொன்னான்.

"அவனை நமஸ்காரம் பண்ணலையே."

சங்கரய்யர் நினைவுபடுத்தினார்.

"வேண்டாம். அவர் ஃப்ரெண்ட் எனக்கு. ஸ்நேகம். ரொம்ப நல்ல ஸ்நேகம்."

மறுபடியும் அவரைக் கட்டிக் கொண்டான்.

ராதாகிருஷ்ணனுக்கு ஏனோ அழுகை வந்தது.

தனக்கு உறுதுணையாக யாருமில்லை என்று நினைத்துக் கொண்டிருந்தது சட்டென்று விலகி, இந்தப் பிள்ளை இருக்கிறான் என்று தோன்றிற்று. 'இவன் ஸ்நேகமாக இருப்பான். கடைசி வரை காப்பாற்றுவான்' என்ற ஓர் எண்ணம் வேகமாக உள்ளே மலர்ந்தது.

அவர் அவனை நோக்கி கை கூப்பினார். தேங்க்யூ என்று சொன்னார்.

சங்கரய்யர் வாய்விட்டு ராதாகிருஷ்ணனைப் பார்த்துச் சிரித்தார்.

## மனம் உருகுதே

அவன் மெல்ல கைகளை உயர்த்தி தன் தாயின் தலையை அழகாகத் தடவிவிட்டான். குழந்தையைப் போல் இரண்டு பக்கமும் தடவி, வகிடு பக்கம் - மெல்ல நீவி இரண்டு கைகளையும் குவித்து அவளை வணங்கினான்.

"இந்தப் பக்கம் அப்பா ராதாகிருஷ்ணன் உட்கார்ந்திருக்காரே பார்க்கலையா?" சங்கரய்யர் பேசினார். பையன் ராதாகிருஷ்ணன் பக்கம் திரும்பினான். அவர் விரல்களைக் கோர்த்துக்கொண்டான்.

அப்பாவும் பிள்ளையும் ஒருவரையொருவர்

நான்கு தலைமுறைக்கு முன்னால் மிக ஆச்சாரமாக இருந்த ராதாகிருஷ்ணனுடைய பரம்பரை, மெல்ல மெல்ல அனுஷ்டானங்களைக் கைவிட்டு கும்பனி வேலைக்கு சேர்ந்தது. பிரிட்டிஷ் கும்பனி வேலையிலிருந்து அரசாங்க உத்தியோகத்திற்கு மாறி, அரசாங்க உத்தியோகத்திலேயே உயர் பதவிகளைப் பெற்று, பிறகு மறுபடியும் சுதந்திரமடைந்த காலத்தில் தனியார் வேலைக்கு முயற்சி செய்வதைத் தங்களுடைய வேலைக்குக் கல்யாண குணங்களாகக் கொண்டு, அந்த வேகத்திற்கு



**• பாலகுமாரன்**

பூஜை புனஸ்காரங்கள் வைத்துக் கொள்ள முடியாததால் மானஸ பூஜை என்று ஆரம்பித்து, பண்டிகைக்கு விதம் விதமாகத் தின்பதே கொண்டாடுவது, பூஜை செய்வது என்று மாறிவிட்டது. அனுஷ்டானங்கள் இல்லையே தவிர, பயம் கலந்த பக்தி இருந்தது.

"இந்த மாசம் தர்ப்பணம் பண்ண முடியலை. நல்ல ஜுரம். ஸ்லிப் ஆயிடுத்து. அதனால சாஸ்திரியைக் கூப்பிட்டு, வெத் தலைப் பாக்க வச்சு பதினொண்ணேகால் ரூபாயக் கொடுத்துட்டேன்" என்று சமாதானங்கள் பல செய்துகொண்டது.

'நவராத்திரியில ஏதோ ஒரு நாள் சண்டிஹோமம் பண்றதுன்னு எங்க பரம்பரையில வழக்கம். இப்போ எங்க ஹோமம் பண்ண முடியும்? அம்பிகை, மீனாட்சி என்னை மட்டும் ரட்சின்னு ரெண்டு வார்த்தை சொல்லி கற்பூர ஆரத்தி காண்பிச் சுட்டு, பொங்கல் வடை திங்கறதோட சரி, என்று தனக்குத் தானே தன்னுடைய சமாதானத்தைப் பற்றி பீற்றிக்கொள்ளத் துவங்கியது.

ராதாகிருஷ்ணனால் பூஜை செய்ய முடியவில்லையே தவிர ரேவதி அதில் ஈடுபாடு காட்டினாள். வீட்டிலுள்ள ஆண்கள் பூஜை செய்ய முடியவில்லை என்று அலட்டிக்கொண்ட போது, பெண்கள் அதை மிக முக்கியமான காரியமாக எடுத்துக் கொண்டார்கள். முடிந்த நேரமெல்லாம் ஏதேனும் ஸ்தோத்திரங்கள் படித்தார்கள்.

ரேவதியால் அந்த வீட்டு பூஜையறைப் பணிச் சென்று இருந்தது. பகலும், இரவும் விளக்குகள் இடையறாது எரிந்தன.

'யார் எப்போ விளக்குல எண்ணெய் குறைஞ்சதப் பார்த்தாலும் ஒரு கரண்டி விட்டுட்டுப் போங்கோ' என்ற கட்டளை இருந்தது.

வீடு அதை அப்படியே நிறைவேற்றியது. இதைத் தவிர பெரிய பூஜை, புனஸ்காரம் எதுவும் அவர்கள் செய்ததில்லை.

இப்படி ஒரு இறையனுபவம் பெற்று ஒரு

பிள்ளை கைவிரித்து உட்கார்ந்திருப்பதைப் பார்க்கும்போது இது சரியா, இது அவசியமா? என்ற கேள்வி அந்தப் பெற்றோர்களுக்கு ஏற்பட்டது. எவர் உதவியும் இல்லாமல் வெறும் மூச்சுப் பயிற்சியும், மந்திர ஜபமும் செய்து முற்காலத்திய அந்தணர்கள் இந்தப் பரவச நிலையை அவ்வப்போது அடைந்ததும் அந்தப் பரவச நிலையில் நல்லது கெட்டதை ஊருக்குச் சொன்னதும் அவர்கள், மறந்துவிட்டிருந்தார்கள்.

"இந்த வருஷம் மழை பெய்யுமா சாமி?"

விவசாயி வந்து கேட்க தெரியலையேய்யா என்று அந்தணர் பதில் சொல்லுவார்.

"யோசனை பண்ணிச் சொல்லுங்க சாமி" விவசாயி கேட்க, சொல்றேனப்பா என்று அந்தணர் தலைகுனிந்து உட்கார்ந்திருப்பார். வேகமாக மந்திரஜபம் செய்வார்.

"உடனே சொல்ல முடியலை பெரியவரே. நாளைக்குக் கார்த்தால சொல்றேன் வாங்கோ" என்று கைகூப்புவார்.

அந்த மந்திரஜபம் அப்பொழுது துவங்கி அந்த இரவு முழுவதும் தொடரும். விடியற்காலையில் பின்பக்கம் போய் உடம்பு சுத்தி செய்துகொண்டு ஆற்றங்கரைக்குப் போய் குளிரக் குளிர நீராடி, இன்னும் உக்கிரமாக மந்திரஜபம் செய்து திண்ணையில் அமர்ந்து தொடர்ந்து கொண்டிருக்க அந்த விவசாயியானவர் மறுபடி வருவார். கைகூப்புவார். அவரைப் பார்த்ததும் அந்தணருக்கு உள்ளுக்குள் இருந்து ஒரு வேகம் பிறக்கும், சட்டென்று முகம் மாறும். கை உயரப் போகும். நெஞ்சடியில் ஒரு கை மலர்ந்து நிற்கும்.

"இது நம் ஊர். இவர் நம் ஊர் விவசாயி. நமக்கு உதவி செய்கின்ற தொழிலாளி. இவருக்கு ஒரு கவலை இருக்கிறது. அந்தக் கவலை ஊர் பற்றிய கவலை. உழவு பற்றிய கவலை. பயிர் வளர்ப்பு பற்றிய கவலை. உயிர்கள் பற்றிய கவலை" என்று புரிந்து மிக வேகமாக அவரின் மீது பார்வை செலுத்தி உள்ளிருந்து பீறிடும்படியாய் வார்த்தைகள் இறைப்பார்.

"இன்னும் மூணு நாள்ல மழை பெய்யும். கவலையே வேண்டாம். உழுது ரெடியா வைங்கோ, சொத சொதன்னு முழங்கால் சேறு வரும்!"

"வாக்கு சொல்லிட்டீங்க சாமி. அடையாளமா ஒரு குறி சொல்லுங்களேன்!"

"ஆந்தை தரையில நடந்து வரும் போ. ஆந்தை தரையில நடந்து வந்தா மழை நிச்சயம் பெய்யும்."

அவர் சரியென்று வணங்கிவிட்டு நகர்ந்து போவார். போன ஐந்தாவது நிமிடம் திரும்ப திபுதிபுவென்று ஓடி வருவார்.

"சாமி பார்த்தேங்க. கோயில் தாண்டி போறபோது கோயில் கர்ப்பக்கிருகத்துலேர்ந்து ஓர் ஆந்தை நடந்து வந்து என்னைப் பார்த்து ஒரு சிரிப்பு சிரிச்சுது. பட்டுனு பறந்து போச்சு. ஆந்தை நடந்து வந்ததைப் பார்த்தேன் சாமி. அப்போ மழை பெய்யுமில்லை" என்று கேட்க அதுவரை அடங்கி உள்ளுக்குள் இருந்தவர் மெல்ல மலர்ந்து 'பெய்யும் போ' என்று சொல்வார்.

இதற்கு எந்தக் காசும் இல்லை. எந்தக் கட்டணமும் இல்லை. பரஸ்பர உதவி. மழை பெய்து நிலம் சேறாகி நாற்று நட்டு, நாற்றை மாற்றி வயலில் இறக்கி, கவனமாய் வளர்த்து களை பிடுங்கி, கதிர் சாய அறுத்து, நெல் அடித்துக் கொண்டுபோகும்போது கூடை கூடையாய் வீட்டுக்கு அனுப்பும்போது, உள்ளுக்குள் அந்த விவசாயிக்கு சட்டென்று தோன்றும்.

---

**"ஹலோ...! E.B ஆபீஸா சார்...? கரண்ட் எப்ப சார் வரும்?"**

**"லைட் ஸ்விட்சை ஆன் பண்ணி வைங்க; பவர் வந்ததும் தெரியும்!"**

**- சீர்காழி வி. ரேவதி**

---

'ஐயரு சொன்னாரல்லவா. அவருக்கு இரண்டு கூடை அனுப்பு' என்று பிள்ளைகளுக்கு கட்டளையிட இரண்டு பிள்ளைகள், இரண்டு கூடை நெல்லைக் கொண்டு வந்து ஐயர் வீட்டுத் திண்ணையில் வைத்துவிட்டு கைகட்டி நிற்கும்.

"யாரு, அவர் பிள்ளையா வா, வா, உட்கார்" என்று சொல்லி தாகத்திற்கு நீர் மோர் கொடுத்து, உள்ளங்கையில் நெய்யும், சர்க்கரையும் கலந்த இனிப்பு கொடுத்து ஆசீர்வாதம் செய்து அனுப்பப்படும்.

அம்மாதிரி அந்தணர்கள் அலுவலகத்திற்குக் கூலி வேலை செய்யப் போக, இந்த குணாதிசயங்கள் பிய்ந்துபோய் விட்டன.

விவசாயிக்கும் கூலி வேலை. குயவனுக்கும் கூலி வேலை. கருமாருக்கும் கூலி வேலை. அந்தணனும் கூலி வேலை என்று எல்லோரும் கூலிக்கு வேலை செய்ய ஒரே வர்க்கமாகிவிட்டார்கள். உட்கார்ந்து உள்ளுக்குள் பார்க்கின்றது எவருக்கும் இல்லாமல் போயிற்று.

"அப்பாக்கு ஒரே கவலை. என்ன பண்ணலாம்?" சங்கரய்யர் ராஜாராமனைப் பார்த்துக் கேட்க, அவன் பரவச நிலையில் அவரைப் பார்த்துச் சிரித்தான்.

"என்னை ஏதாவது கேட்டுண்டே இருக்கணுமா?" என்று பதிலுக்குக் கேட்டான்.

சங்கரய்யர் சிரித்தார். அவனும் சிரித்தான். இரண்டுபேரும் ஒருவரையொருவர் ஆனந்தமாகக் கட்டி அணைத்துக்கொண்டார்கள். கை கோர்த்துக்கொண்டார்கள்.

"அப்பாவுக்கு ஒரே கவலை. என்ன பண்ணலாம்."

மறுபடியும் சங்கரய்யர் கேட்க அவன் கூர்மையானான்.

"ஔஷாதிகள் நிறைந்த தோட்டம். அமைதியான வாழ்க்கை. அப்பா அதுக்கு பழகிக்கணும்" என்று சொன்னான்.

"மாட்டேன்னா சொல்லுவார்."

சங்கரய்யர் மறுபடி கேட்க "அப்படித்தான் ஆரம்பித்தில் தோணும். உள்ள போய்



உட்கார்ந்தபிறகு மெல்ல மெல்ல அந்த இடம் பிடிபடும்..."

"அப்பாவுக்கு வேலை போயிடும் போல இருக்கே."

சங்கரய்யர் கேட்க, "மறுபடியும் இன்னொரு வேலை வந்தாச்சு."

"யார் தருவா?"

"நீங்க கொடுங்கோனேன்! நீரே அவர். அவரே நீர்."

ராஜாராமன் மறுபடி சொன்னான். மறுபடியும் தந்தையை அணைத்துக்கொண்டான்.

அப்பா இந்த முறை மீண்டும் அவனை நோக்கி கைகூப்பினார். அவன் அப்பாவை அணைத்துக்கொண்டே அம்மாவைப் பார்த்தான். அம்மாவின் கைகளை எடுத்துக் கண்ணில் ஒற்றிக்கொண்டான். மெல்ல சுபத்ராவை நோக்கிச் சிரித்தான். அவள் தலையையும் தடவி விட்டான். அவள் கைகளையும் பற்றி நெற்றியில் வைத்துக் கொண்டான்.

சங்கரய்யரை உற்றுப் பார்த்தான்.

ருக்மணி இரண்டு டம்ளர்களில் காபி எடுத்து வந்தாள். ராதாகிருஷ்ணனனிடமும், ரேவதியிடமும் நீட்டினாள்.

"அதை வாங்கிக் கொடு" என்று சங்கரய்யர் சொல்ல ராஜாராமன் அதை வாங்கி தன் வலதுகையால் அதைப் பொத்தி, மனம் முழுவதும் அந்தக் காபியில் கலக்கவிட்டு அம்மாவிடம் நீட்டினான். இன்னொரு டம்ளரை வாங்கி அதன் முழுவதும் தன் மனத்தைக் கலக்கவிட்டு அப்பாவிடம் நீட்டினான். மறுபடியும் சங்கரய்யரைப் பார்த்தான்.

அவன் கண்களிலிருந்து போதும் என்றொரு செய்தி வந்தது.

"சரி, ராஜாராமன் போதுங்கறான். வீட்டுக்குப் போகணும். வீட்டுக்குப் போய் தனியா இருக்கணும்னு ஆசைப்படறான், இல்ல? இந்த இடத்துல தனியா இருக்க முடியலை, இல்ல? இவாளோட இருக்கறது சிரமப்படுத்தறது. இல்ல?" என்று சங்கரய்யர் கேட்க, ஆமாம் என்று தலையசைத்தான்.

சங்கரய்யரின் கைகளை எடுத்து முகத்தில் பதிய வைத்துக்கொண்டான்.

மிக்க நன்றி என்பது போல அவரைப் பார்த்தான். சுபத்ராவைப் பார்த்தான். அப்பாவையும், அம்மாவையும் பார்த்து வெட்கப்பட்டான். எழுந்து விலகி நின்றான்.

"உங்களை நமஸ்காரம் பண்ணட்டுமா?" என்று கைகூப்பி சங்கரய்யரைக் கேட்டான்.

"என்னை மட்டும் பண்ணா போறாது. அம்மாவை முதல்ல பண்ணு" என்று சொல்ல அம்மாவை விழுந்து கால் தொட்டு நமஸ்கரித்தான்.

"குழந்தைய ஆசிர்வாதம் பண்ணு" என்று ரேவதியிடம் அவர் கட்டளை விட்டார்.

ரேவதி நமஸ்கரிக்கின்ற பிள்ளையின் தலையைத் தடவிவிட்டாள்.

"அப்பாவுக்குப் பண்ணுடா."

அப்பாவுக்கும் மறுபடி பண்ணினான்.

"எல்லாருக்கும் சேர்த்துப் பண்ணு."

அவன் மறுபடியும் விழுந்து சங்கரய்யரை வணங்கினான்.

சங்கரய்யர் மனைவிக்கு அருகே போய் அவளை விழுந்து நமஸ்கரித்தான். ருக்மணி ஒரு சிறிய தட்டில் கேசரியோடு வர, அவளையும் நிற்க வைத்து அவளையும் விழுந்து வணங்கினான்.

"நல்ல பொண்டாட்டி கிடைப்பா உனக்கு."

ருக்மணி ஆசீர்வாதம் செய்தாள்.

(தொடரும்)

இராமேஸ்வரத்தில் (தீபாவளி அமாவாசையன்று) அன்னதானமிடுவது வாழ்வில் பெரும் புண்ணியத்தைக் கொடுக்கும்!

# பித்ரு க்ஷேத்ரமாக விளங்கும் இராமேஸ்வரத்தில்

# தீபாவளி அமாவாசையன்று

# நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

**ஆன்மீக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புனித க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்குகொள்ள அன்புடன் அழைக்கிறோம்!**

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ இராமநாதசுவாமி தீபாவளித் திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

பன்னிரெண்டு ஜோதிர்லிங்க ஸ்தலங்களுள் ஒன்றான இராமேஸ்வரத்தில் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீராமநாதசுவாமி உடனிருந்து அருள்பாலிக்கிறார். மூர்த்தி, தீர்த்தம், தலம் மூவகையாலும் இராமேஸ்வரம் சிறப்புற்று சிவவிஷ்ணு ஸ்தலமாக பிரகாசிக்கிறது. மாங்கல்ய தோஷம், புத்திர தோஷம், செவ்வாய் தோஷம், நாகதோஷம் போன்ற எல்லாவிதமான தோஷங்களுக்கும் பரிகாரத்தலமாக இராமேஸ்வரம் விளங்குகிறது. இத்தகைய சிறப்புமிக்க புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நேரில் சென்று நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய இயலாத அன்பர்களுக்காக, "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் அன்னதானத் திருப்பணி நடைபெறுகிறது. புண்ணியபூமி இராமேஸ்வரத்தில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் அன்னதானம் அளிக்கும் பணியிலும், குடும்பம் நலம் பெற நெய் விளக்கேற்றும் பணியிலும் நாமும் பங்கு கொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

- தங்கள் சார்பாக நெய் தீபமேற்றி அன்னதானம் செய்ய தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பலாம்.
- ரூ.500/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கும், நெய் தீபம் ஏற்றுவதற்கும் நன்கொடையை அனுப்புவோர், திருமண நாள், பிறந்த நாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபமேற்றி அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட 'கோடி தீர்த்த' சொம்பும், வலம்புரி சங்கும் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீ இராமநாதசுவாமி வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

- ரூ.5000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை அன்று இராமேஸ்வரத்தில் நெய் தீபம் ஏற்றி அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து வருடங்கள் பிரசாதமும், "ஆன்மீகம்" மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியினரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மிக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 336 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள "ஸ்ரீமத் இராமாயணம்" புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு இராமேஸ்வரத்தில் நேரில் சென்று 'தர்ப்பணம்' செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் தர்ப்பணம் செய்யப்படுகிறது. பித்ருக்களைக் குறித்து இராமேஸ்வரத்தில் செய்யப்படும் தர்ப்பணம் செல்வம், கீர்த்தி, ஆயுள், ஸ்வர்க்கம் முதலிய நன்மைகளை அளிக்கும். எதிரிகளை விலக்கும். தன் வம்சம் தழைத்தோங்கச் செய்யும். மறைந்த முன்னோர்களுக்கு தர்ப்பணம் செய்ய ரூ.750/- அனுப்பும்போது யாருக்கு தர்ப்பணம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். மூர்த்தி, ஸ்தலம், தீர்த்தம் ஆகிய மூவகையாலும் சிறப்பு வாய்ந்த இராமேஸ்வரத்தில் தர்ப்பணம் செய்து கிடைத்தற்கரிய பேற்றைப் பெற்று க்ஷேமமாக வாழ அழைக்கிறோம்.

இராமேஸ்வரத்தில் அமாவாசையன்று அன்னதானம் செய்ய விரும்பும் ஆன்மிக அன்பர்கள் சார்பாக நெய் தீபம் ஏற்றுகிறோம். தாங்கள் என்ன வேண்டுதலுக்காக தீபம் ஏற்ற வேண்டும் என்பதையும், உங்கள் பெயர், நட்சத்திரத்தையும் குறிப்பிட்டு எங்களுக்கு எழுதி அனுப்பினால் அதன்படி அமாவாசையன்று தீபம் ஏற்றி தங்களுக்கு பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். தீபமேற்றும் பணியிலும், அன்னதானப் பணியிலும் ஈடுபட விரும்பும் ஆன்மிக அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque/D.D/M.O மூலம் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் அன்னதானப் பணியும், தீப வழிபாட்டுப் பணியும் தெய்வீகப்பணியாக தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.

ஸ்ரீ பர்வதவர்த்தினி

*Cheque/D.D./M.O* அனுப்ப வேண்டிய முகவரி:


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

## SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)

68, Nadu Street, (Opp: Sri Kapaleeswarar Temple), Mylapore, Chennai - 600 004.

Tel: 4959302 Fax: (044) 7102308 E-mail: sivasiva@vsnl.net


ஸ்ரீ இராமநாதசுவாமி

பித்ருக்களுக்கு இராமேஸ்வரத்தில் தர்ப்பண பூஜை செய்வது ஒவ்வொருவரின் இன்றியமையாத கடமையாகும்!

# திருப்பூர் கிருஷ்ணன்

சுவடுகள் 42

இந்தத் தொடரின் வாசகர்கள் நேரிலும், தொலைபேசியிலும், கடிதங்கள் மூலமாகவும் அடிக்கடிக் கேட்ட கேள்வி, 'எப்படிக் கடந்த கால இலக்கிய விஷயங்களை இத்தனைத் துல்லியமாக உங்களால் ஞாபகம் வைத்துக் கொள்ள முடிந்தது?' என்பதுதான். அதற்குக் காரணம் என் தாயார். என்மேல் அளவற்ற பாசம் செலுத்தும் என் அம்மாவைப் பிரிந்து தான் பல்லாண்டுகள் முன் வேலைதேடி திருப்பூரிலிருந்து சென்னை வந்தேன். அவர் மனம் என் பிரிவைத் தாங்க இயலாது தவித்தது. எனவே நாள்தோறும் அவருக்கு ஒரு கார்ட் எழுதலானேன். அன்றன்று நடந்த விஷயங்களைத் தாங்கிய அஞ்சலட்டை. உண்மையில் அது ஓர் இலக்கிய நாட் குறிப்பு. நான் தங்கியிருந்த தீபம் அலுவலகத்திற்கு வந்து சென்ற ஏராளமான எழுத்தாளர்களைப் பற்றிய சுவாரஸ்யமான பல தகவல்கள் அந்த அஞ்சலட்டைகளில் உண்டு. சுமார் நான்கைந்து ஆண்டுகள் இந்த அஞ்சல் இலக்கியம் நடந்து கொண்டிருந்தது. அஞ்சலட்டை மீது, எழுதியவருக்கு எந்த உரிமையுமில்லை. அது எழுதப்பட்டவருக்குச் சொந்தமான பொருள். இந்தத் தொடரை நான் ஆரம்பித்தவுடன் என் தாயார், தாம் பத்திரமாகப் பாதுகாத்து வைத்திருந்த தம் அஞ்சலட்டைகளையெல்லாம் எனக்கு வழங்கிவிட்டார். அந்த அஞ்சலட்டைகளில் உள்ள குறிப்புகளின் மிகச் சிறு பகுதியே இந்தத் தொடர். சம்ஸ்க்ருத ஞானம் நிறைந்த என் தாயார் திருமதி ஜானகிக்கும் என் தகப்பனார் திரு பி.எஸ்.சுப்பிரமணியத்திற்கும் நன்றி சொல்வதும் ஒருவகையில் தற்பெருமையே.

• இலக்கிய வீதி இனியவன்



# நிறைவடையும் நெஞ்சம்...

திருப்பூர் சிக்கண்ணா கல்லூரியில் நான் பி.ஏ. தமிழ் இலக்கியம் படித்த காலம். ஒரு நாள் என் ஆசிரியர் முப்பால்மணி வகுப்புக்கு வந்ததும் 'இன்று ஒரு சிறுகதையை நான் வாசிக்கப் போகிறேன். அதுதான் இன்றைய வகுப்பு' என்றார். ஒரு கதையை வாசிக்கலானார். தாமரை பத்திரிகையில் வெளிவந்த 'நியாயங்கள் மாறுபடும்' என்ற அந்தக் கதையை மற்ற மாணவர்கள் சாதாரணமாகத்தான் கேட்டுக் கொண்டிருந்தார்கள். நான் வியப்போடும் பூரிப்போடும் கேட்டுக் கொண்டிருந்தேன். அது பத்திரிகையில் வெளிவந்த என் முதல் சிறுகதை. அந்தக் கதை பிரசுரமாகியிருப்பதே எனக்கு அப்போதுதான் தெரியும். முப்பால்மணி கதையை வாசித்து முடித்தார். என்னை எழுந்து நிற்கச் சொல்லி நான்தான் அந்தக் கதையை எழுதியவன் என்பதை அறிவித்தார். நான் எழுத்

துத் துறையில் எழுந்து நிற்கும் தன்னம்பிக்கை பெற்றது அன்று தான். சக மாணவர்களின் பலத்த கைதட்டல்களினிடையே வகுப்பு மணி அடித்தது. முப்பால்மணி அன்று போட்ட பிள்ளையார் சுழியால்தான் நான் எழுத்துத் துறைக்கே வந்தேன். சென்னை வந்து, இலக்கிய வீதி இனியவன் நடத்திய மதுராந்தகம் கூட்டத்தில் கலந்து கொண்ட போது, கே.ஆர். வாசுதேவன் என்ற உத்தமமான மனிதரைச் சந்தித்தேன். அவர் ஆதரவால், எழுத்தாளனாக இருந்த நான் பத்திரிகையாளனாகும் வாய்ப்பும் பெற்றேன். இன்றும் என் தமிழாசிரியர் முப்பால்மணியை நினைக்கையில் மனம் இனிக்கிறது. தமிழ் வாழ்க என்ற வறட்டுக் கூச்சலால் தமிழ் வாழாது. தமிழ் வாழ வேண்டுமானால் தமிழை வாசிக்க வேண்டும். தமிழாசிரியர்களை மதிக்க வேண்டும். தமிழாசிரியர்களையும் எழுத்தாளர்களையும் மதிக்காத மொழி எப்படி வளரமுடியும்?


• முப்பால்மணி

சூளைமேட்டில் இருந்த நாரண துரைக்கண்ணனை நேரில் சந்திக்கச் சென்றேன். அதற்கு இரண்டு நாட்கள் முன், அவரை நான் கண்டு எழுதிய பேட்டி ஒன்று அவரது புகைப்படத்துடன் பத்திரிகையில் வெளியாகியிருந்தது. அந்தப் பிரதியை தொண்ணூறு வயதான அவரிடம் கொண்டு கொடுக்கத்தான் நான் சென்றது. ஆனால் அதற்குள் அந்த இதழை வாங்கித் தன் பேட்டி, புகைப்படம் எல்லாவற்றையும் அவர் பார்த்திருந்தார். என்னைப் பார்த்தவுடன் மகிழ்ச்சியோடு எழுந்தார். அன்போடு ஆரத் தழுவிக் கொண்டார். அவர் விழிகளில் ஆனந்தக் கண்ணீர். அவருடைய பரவசம் எனக்கு ஆச்சரியமாக இருந்தது. 'உங்களின் இலக்கிய வாழ்வில் எத்தனையோ முறை உங்களைப் பற்றிய செய்திகள் வந்திருக்கும். ஆகையால் புகழ் உங்களுக்குப் பழகித் தான் போயிருக்கும். ஏன் இன்று மட்டும் உங்களிடம் இத்தனை திருப்தி?' எனப் பரிவோடு விசாரித்தேன். அதற்கு அவர் சொன்ன பதில் என் கண்ணைத் திறந்தது. 'தம்பீ. நான் சந்தோஷப்படுவது என் பேட்டி வந்ததற்காக மட்டுமல்ல. என் புகைப்படம் இடம் பெற்றதற்கே இந்த ஆனந்தம். ரொம்ப நாள் ஆயிற்று என் படம் பத்திரிகைகளில் வந்து. இங்கே சுற்றியுள்ள ஜனங்களுக்கு நான் எழுத்தாளன் என்பதே தெரியாது. நாள்தோறும் வீதிக்குச் சென்று தெருக் குழாயில் நீண்ட வரிசையில் நின்று தண்ணீர் பிடிப்பேன். நேற்று நான் வரிசையில் நின்றபோது எல்லோரும் 'அந்த வயதான பெரியவர் எழுத்தாளரப்பா. அவரைப் பற்றிப் பத்திரிகையில் புகைப்படத்தோடு செய்தி வந்திருக்கிறது. அவரை ஏன் வரிசையில் நிற்க வைக்கிறீர்கள்? அவருக்கு முதலில் தண்ணீர் கொடுத்து அனுப்பிவிடுங்கள்' என்று சொல்லி எனக்கு முதலில் தண்ணீர் வழங்கி அனுப்பிவிட்டார்கள். தண்ணீருக்காக நான் கால்கடுக்கக் காத்திருக்கும் சிரமத்திலிருந்து இனி விடுபட்டு விடுவேன். அதன் பொருட்டாகத்தான் இந்த ஆனந்தம்!' என நெகிழ்ந்தார் அந்த முதியவர். என் விழிகளும் தளும்பின. அசோகமித்திரனின் தண்ணீர் நாவல், கோமல் சுவாமிநாதனின் தண்ணீர் தண்ணீர் திரைப் படம், எனப் பல விஷயங்கள் மனத் திரையில் ஓடின. சென்னையின் தண்ணீர்ப் பிரச்னை ஒரு முதுபெரும் எழுத்தாளருக்கு கலபத்தில் தண்ணீர் தராமல் தண்ணீர் காட்டிக் கொண்டிருந்தது. இன்று அந்தக் கிருஷ்ணா தண்ணீர் வழங்க மறுத்தாலும், அன்று இந்தக் கிருஷ்ணனால் ஓர் எழுத்தாளருக்கு வரிசையில் நிற்காமல் தண்ணீர் பெற முடிந்திருக்கிறது. அதற்குக் காரணம் நான் எழுதிய எழுத்து மட்டுமல்ல. வெளியிட்ட புகைப்படம்.

பெரும் சாதனையாளர் நாரண துரைக்கண்ணன். பாரதி பாடலை நாட்டுடைமையாக்க அனுமதி வேண்டி அவரும் வல்லிக்கண்ணனும் மற்றும் சிலருமாக பாரதியாரின் மனைவியைத் தேடிச் சென்றபோது, நாரண துரைக்கண்ணனின் மகன் கடும் நோய்வாய்ப்பட்டிருந்தான். நிலைமை கவலைக்கிடம் எனத் தந்தி வந்தபோதும், பாரதிபணி தான் முக்கியம் என்று சென்னை வராமல் இருந்துவிட்டார் நாரண துரைக்கண்ணன். அப்புறம் அவர் தம் மகனைப் பார்க்கவே முடியவில்லை. இந்தச் செய்தியை என்னிடம் சொல்லி அவர் கண்ணைத் துடைத்துக் கொண்டதுண்டு. அப்பேர்ப்பட்ட தமிழ்ச் சாதனையாளரின் புகைப்படம் பத்திரிகையில் வெளிவருவது அவ்வளவு அபூர்வமாகிவிட்டது. ஆனால் அரசியலில் ஆரம்ப கால அரிச்சுவடி படித்துக் கொண்டிருப்போரின் புகைப்படங்களும், சினிமாவில் இப்போதுதான் தலைகாட்டியிருப்போரின் வண்ணப் படங்களும், பத்திரிகைகளில், எப்படிப்பட்ட விதவித நிலைகளில் இடம் பெறுகின்றன! இந்தச் சுவடுகள் தொடரில் நான் நேசித்த, நேசிக்கும் எழுத்தாளர்களின் புகைப் படங்களெல்லாம் இடம்பெற வேண்டும் என விரும்பினேன். அதைச் சாத்தியமாக்கியது கல்கி. தேடித் தேடி எழுத்தாளர்களின் புகைப் படங்களை வெளியிட்டார்கள் கல்கி ஆசிரியர் குழுவினர். அந்த வகையில் என் மனமும் இந்தத் தொடரும் நிறைவடைகின்றன.

(நிறைந்தது)

12

**வே**தம் அனந்த: என்று வேதமே சொல்கிறது. வேதத்திற்கு முடிவே கிடையாது. முடிவில்லாதவனான எம்பெருமானைச் சொல்ல வந்த வேதத்துக்கும் முடிவு கிடையாது.

அப்படி விளங்கும்படியான வேத வான்மயத்தினால் எம் பெருமானுடைய திவ்யமான பெருமைகள் விளக்கிக் காட்டப் படுகின்றன. இதைத்தான் பகவானும் கீதையிலே சொல்கிறான் :

'வேதங்கள் அனைத்தினாலும் அறியப்பட வேண்டியவன் நான் ஒருவனே' என்கிறான். ஒருவனே என்பதில் இருக்கிற ஏவகாரத்தை நாம் கவனிக்க வேண்டும்.

பரம பிரமாணமான வேதம்தான் அவன் பெருமைகளை நமக்கு எடுத்துக் காட்டும் என்பது அர்த்தம்.

அதனால்தான் மகான்களும் ஆசார்யார்களும் இப்படி வியாக் யானம் சொன்னார்கள் :

"வேதம் இருக்கிறது என்றால், பரமாத்மா இருக்கிறான்; வேதம் இல்லை என்றால் பரமாத்மா இல்லை!"

இதிலே முதல் வாக்கியம் எல்லோருக்கும் பிடிக்கிறது; அங்கீ காரம். ஆனால் இரண்டாவது...!

வேதம் இல்லையானால் பரமாத்மா இல்லை என்று எவ்வாறு சொல்ல முடியும்? வேதமே உலகத்தில் ஒலிக்கவில்லை என்று வைத்துக் கொள்வோம்,... பரமாத்மாவை இல்லை என்று சொல்ல முடியுமா?

இதனுடைய தாத்பர்யம் என்னவென்றால், வேதம் இருந்தால்

# குறையொன்றுமில்லை

தான் பரமாத்மா இருக்கிறான் என்பதை நாம் உணர முடியும். அப்படி உணரச் செய்வதற்குக் குற்றம் குறையில்லாத பிரமாணம் வேதம்தான்.

வேத வான்மயம் என்பது ஒரு தோஷமும் இல்லாதது. ஏனென் றால் அது மனிதனால் இயற்றப்பட்டது அல்ல. அவ்வாறு மனித னால் இயற்றப்பட்டிருந்தால் அதிலே வஞ்சனை இருக்கும். பிரமை இருக்கும். ஒருவரால் இயற்றப்பட்ட நூல் என்றால், அவர் என்ன படித்தாரோ அதைத்தான் அவர் எழுத்தில் வலியுறுத்துவார். ஆசை யினாலே அந்த நூலில், அவர் எதிலே நிபுணரோ அந்த விஷயங் கள்தான் வரும்! வஞ்சனைக்கும் இடம் இருக்கலாம். புத்தியை மயக்கலாம்.

ஆனால் வேதத்திலே வஞ்சனைக்கோ பிரமைக்கோ இட மில்லை.

எல்லா ஜீவராசிகளும் உயர்ந்த ரீதியிலே பெருமைப்படக் கூடிய விஷயத்தை வேதம் நமக்கு எடுத்துச் சொல்கிறது.

என்ன சொல்கிறது...?

பாபங்களைப் போக்கக் கூடியவன் - நம்மைப் பாவனமாக்கச்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

கூடியவன் - பரமாத்மா என்கிறது. இந்த பரமாத்ம சப்தம் தான் சஹஸ்ரநாமத்திலேயும் வருகிறது. இந்த விஷயம் கர்ம காண்டத்திலேயும் ஞான காண்டத்திலேயும் (வேதங்களிலும் உப நிஷத்களிலும்) விளக்கப்படுகிறது. இப்படி இரண்டு காண்டத்திலேயும் ஒரே மந்திரம் வருவது ரொம்ப ஏற்றமானது.

பாபங்களைப் போக்கி நம்மைப் பிரகாசிக்கச் செய்யக்கூடியவன் பரமாத்மா என்றேன். அவன் பூதாத்மா என்பதாலே அவனை அடிபணியும் ஆத்மாக்களுக்கும் பாவனத்தன்மை அளிக்கிறான்.

பாவனத் தன்மையென்றால்...?

புண்ணியமும் பாபமும் இல்லாதிருந்தால் பாவனத்தன்மை. புண்ணியம் கூட நாம் பகவானை அடைவதற்கு விரோதி தான்! புண்ணியமும் விரோதி; பாபமும் விரோதி. இரண்டையும் உதறியாக வேண்டும்.

குளிர் காலத்திலே மணல் பாங்கான இடத்திலே ஒரு குதிரையை அவிழ்த்து விட்டால், அது மண்ணிலே விழுந்து புரளும். பிறகு எழுந்து உதறி சிலிர்த்துக் கொள்ளும். அப்படிச் சிலிர்க்கிறபோது, அதன் உடலிலிருந்து ரோமங்கள் கீழே உதிரும்.

அந்த மாதிரி, நம் மீது ஒட்டிக் கொண்டிருக்கிற புண்ணிய - பாபங்களாகிற ரோமங்களை உதறித் தள்ள வேண்டும். புண்ணியமும் அவனை அடைவதற்குத் தடை; பாபமும் அவனை அடைவதற்குத் தடை. இரும்பினால் ஆன விலங்கு பாபம்; புண்ணியம் பொன்னினால் ஆன விலங்கு.

விலங்கு, பொன்னால் செய்து போட்டால் உயர்த்தியாகிவிடுமா? சுவதந்தரமாகக் கையை எடுக்க முடியாது. தங்கத்தினால் விலங்கு போட்டிருக்கிறார்கள் என்று பெருமையா பட முடியும்!

புண்ய கர்மா என்பது சுவர்காதி பலன்களைக் கொடுத்து, பகவானை அடைய விடாமல் தடுத்து, மீண்டும் பூமியிலே தள்ளுகிறது. பாப கர்மா, நரகாதி துன்பங்களைக் கொடுத்து திரும்பவும் பூமியில் தள்ளுகிறது.

அப்படியானால் என்னதான் பண்ணுவதாம்?... அவன் திருவடியையே பற்றினால், புண்ணிய - பாபங்கள் தாமே போய்விடும். அவன்தான் பிரபன்னன். அவனையே விரும்பக்கூடியவன் ஞானி. 'ஞானி என்னுடைய ஆத்மா' என்று பகவானே கொண்டாடுகிறான். எல்லோருக்கும் ஆத்மா - அந்தராத்மா - அவனே. அப்படிப்பட்டவன் தனக்கொருவரை ஆத்மா என்று சொல்கிறான்! யார் அவனுக்கு ஆத்மா...? அவனையே விரும்பக் கூடியவர்கள்; அவன் திருவடிகளைப் பற்றக் கூடியவர்கள் தான் அந்த ஆத்மா.

அவன் திருவடிகளைப் பற்றுவோர் பூதாத்மாவாக மாறிவிடுகிறார்கள். புண்ணிய பாபமெல்லாம் போய்விடுகிறது. அவன் ஏற்கும்படியான அளவுக்கு நாம் பெருமை அடைகிறோம்.

இப்படி நம்மைப் பாவனமாக்குகிற பகவானுக்கு மங்களமான திருமேனி என்கிறது வேதம் -'சிவாதனு:'. சிவா என்றால் மங்களம் என்று அர்த்தம். மங்களமான, சோபனமான திருவடிவை உடையவன் எம்பெருமான். அவன் திவ்ய மங்கள ரூபத்தை, சிரஸ் முதல் பாதம் வரை நாம் அனுபவித்தோமேயானால், ஒவ்வொன்றும் நம்மை ஈர்க்கும்.

*தோள் கண்டார் தோளே கண்டார்*
*தொடுகழல் கமலம் அன்ன*
*தாள் கண்டார் தாளே கண்டார்*
*தடக்கை கண்டாரும் அஃதே*
*வாள் கொண்ட கண்ணார் யாரே*
*வடிவினை முடியக் கண்டார்*
*ஊழ் கண்ட சமயத்தன்னான் உருவு*
*கண்டாரை யொத்தார்*

என்று கம்பராமாயணத்திலே வருகிறது. அவதார காலத்திலே பரமாத்மா சக்கரவர்த்தித் திருமகனாய் மிதிலா நகரத்திலே சஞ்சாரம் பண்ணும்பொழுது, அந்த ஊர் ஜனங்களெல்லாம் 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்று அவன் ஓர் அங்கத்தில் பதித்த பார்வையை மீட்க முடியாமல் அடிமையாகிவிட்டனர். அவன் வடிவழகை முழுமையாகக் கண்டவர்கள் யார்தான் இருக்கிறார்கள்!

*சந்திரகாந்தானனம் ராமம்*
*அதீத ப்ரிய தர்சனம்*
*ரூபௌதார்ய குண பும்ஸாம்*
*திருஷ்டி சித்தாப ஹாரிணம்*

என்று ஒரு சுலோகம். திருஷ்டி என்றால் பார்வை, கண்கள். நேத்திரத்தையும் சித்தத்தையும் அப்படியே அபகரித்துக் கொண்டு விடுகிறானாம் பரமாத்மா! அவ்வளவு திவ்ய சுகுமாரமான திருமேனி ஸ்ரீ

சரணடைகிறது. பிறகு, பிரிவு, சோகம்... எனச் செல்கிறது என்கிறார்கள் விஜய் டி.வி. வட்டாரத்தினர். அடடா! தீவிர வாதம் இங்கும் வந்துவிட்டதா!



— அப்பு

ராமனுக்கு. அந்தத் திருமேனியைப் பார்த்த சூர்ப்பனகை மூக்கறுபட்டு காதறுபட்டு ராவணனிடம் போகிறாள்.

'யார் இப்படிப் பண்ணியது?' என்று அவன் கேட்கிறான். அப்போது அத்தனை வலியையும் மறந்து சூர்ப்பனகை ராமனை ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பித்துவிட்டாள்!

"சுகுமாரன், மஹாபலம் பொருந்தியவன், ரூபசௌந்தர்யன், புண்டரீகன், விசாலமான கண்ணழகன்!..." - இப்படி தோத்திரம் செய்கிறாள். யாரால் இப்படிப் பண்ண முடியும்? மஹரிஷிகள்கூட இப்படிப் பண்ணவில்லையே! சூர்ப்பனகை அவ்வளவு பங்கப்பட்டுப் போனாலும் அவளுக்கு மறுபிறவி இல்லை - பகவானை மறவாதார் பிறவாதார் என்பதற்கு சூர்ப்பனகை ஓர் உதாரணம்.

கொண்டல் வண்ணனை கோவலனாய் வெண்ணெய்
உண்டவாயன் என் உளம் கவர்ந்தானை
அண்டர்கோன் அணி அரங்கன் என் அமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாதே

என்கிறார் ஆழ்வார்.

மனசினுடைய சம்யோகம் - சேர்த்தி இல்லாமல் கண்களால் இன்னொன்றைப் பார்க்க முடியாது. அவனோ, மனசையும் கொள்ளை கொண்டு கண்ணையும் இழுத்துக் கொண்டு போய் விடுகிறான்.

ஆராவமுது அவன்! ஆராவமுதே! - இந்த சப்தம் எவ்வளவு அழகு! இதற்கு ஈடு இணை யான சப்தம் வேறு உண்டா?

லோக ஸாரங்க மகா முனிவர், வட தேசத்திலே யாத்திரையாகப் போய்க் கொண்டிருந்தார். தென் தேசத்திலிருந்து ஒருவர் போகிறார். அங்கே அவரைப் பார்த்து, "எங்கேயிருந்து வருகிறீர்; அங்கே ஏதேனும் விசேஷம் உண்டா?" என்று கேட்கிறார் லோக சாரங்க மாமுனி.

"ஆராவமுது!" - இந்த ஒரு வார்த்தைதான் பதில் சொன்னார் தெற்கேயிருந்து வந்தவர். அதைக் கேட்ட லோக சாரங்க மாமுனி நடுநடுங்கிப் போய்விட்டார்.

'மதுரம் வாக்கியம் என்பார்கள்; இப்படி ஒரு பதமா! இவ்வளவு ரம்மியமாக இருக்கிறதே! கேட்பதற்கே மதுரமான செஞ்சொற்கள். இப்படி ஒரு பதமா! இப்படியொரு சொல்லா... இந்தச் சொல் நடையாடும் இடத்துக்கு நாம் போக வேண்டும்' என்று வட திசை யாத்திரையை விட்டுவிட்டு தென்திசைக்கு ஓடி வந்துவிட்டார். அப்படி ஈர்க்கிறது அதன் சக்தி அவரை!

திருமங்கையாழ்வார் சிறிய திருமடல் என்கிற பிரபந்தம் பாடினார். அதைக் காஞ்சிபுரத்திலே விசேஷமாகச் சொல்லி ஸேவிப்பார்கள். வெள்ளிக் கிழமையன்று தாயார் முன்னே சொல்லுவார்கள். சுவாமி தேசிகனுக்கு அந்தக் காட்சியைக் காணும், கேட்கும் அனுபவம்.

'இதைவிட வைகுண்டம் உசத்தியா? வைகுண்ட வாஸம் எனக்கெதற்கு? இந்த திவ்ய தேசத்திலே இப்படியொரு அனுபவம்; இந்த மாதிரி செவிக்கினிய செஞ்சொற்கள்....? இது போதுமே' என்றார்.

செவிக்கினிய செஞ்சொற்களைப் பாடுவோருக்கு, 'இன்கவி பாடும்பரமகவிகள்' என்று பெயர். அழகான தமிழ்ச் சொற்களிலே, அகஸ்திய ஸேவிதமான பாஷையிலே இந்த உயர்ந்த வேத கருத்தைக் காட்டுவதனாலேதான் இந்தப் பிரபந்தங்களுக்கு ஏற்றம்.

நிகம பரிமளம்! அதில் ஒவ்வொரு பதத்தை எடுத்துக் கொண்டாலும் வேத கருத்து. அதனால்தான் அது பெருமையடைகிறது. அதனால்தான் கோஷ்டியிலே (ஊர்வலம்) முன்னே அது சொல்லப்படுகிறது. அதைத் தேடிக்கொண்டு பகவான் போகிறான். சம்ஸ்கிருத வேதம் இருக்கிறது, பாருங்கள்... அது பின்னால் வரும். அது அவனைத் தேடிக் கொண்டு வருகிறது; அவன் தமிழ் மறையைத் தேடிக் கொண்டு செல்கிறான்!

சுவாமி தேசிகனும் 'சந்தமிகு தமிழ் மறையை அத்யயனம் பண்ணக்கூடியவன் நான்' என்கிறார்.

கேட்பதற்கு ரம்மியமான, இவ்யமான சொற்கள் - அந்த சொற்களாலே எம்பெருமானின் திவ்ய வடிவழகை நமக்கு ஆழ்வார்கள் காட்டிக் கொடுப்பதாலே அவன் வடிவழகு எவ்வளவு பெருமை மிக்கதோ, அதை வியக்க வந்த சொற்களும் அவ்வளவு பெருமை மிக்கவை!

(வளரும்)



• 'பானர்' டிஸ்ப்ளே

இந்த வாரம் ஒரே ஆட்டம் கொண்டாட்டம்தான்; அமிதாப்புக்கு 60 வயதாயிற்று... அட, 'அம்பே மாதா'வை விட அமிதாப் முக்கியமாகிவிட்டாரா என்ன? முதலில் நவராத்திரி கொண்டாட்டங்களை முடித்துவிட்டு அப்புறம் 'Big B' யிடம் வருவோமே? அரசு மனமிளகி, இரவு பத்திலிருந்து பதினொன்றரை மணி வரை லவுட் ஸ்பீக்கர் உபயோகத்தை நீட்டித்ததா? எல்லோரும் குஷியாகிவிட்டார்கள். முலுண்டில் நடந்த "ஏக்தா" குழுவின் நவராத்திரி வைபவத்தில், முதன் முறையாக எல்லோருக்கும் இன்ஷ்யூரன்ஸ் செய்யப்பட்டது! ஒரு லட்சம் பேர் கலந்து கொண்ட வைபவத்தில் எல்.ஐ.சி. காரர்களுக்கு நல்ல பிசினஸ். இப்போதெல்லாம் நவராத்திரி விழாவை சமூக விழாவாகக் கொண்டாடி ஜமாய்த்து விடுகிறார்கள். வாஷியில் ஃபைன் ஆர்ட்ஸ்காரர்களின் மூன்று நாள் கொலுவில் மஞ்சள் குங்குமத்துடன், வருபவர்களை ஈர்க்க எக்கச்சக்க ஸ்டால்கள், புடைவை, நகையிலிருந்து, ஜூஸ், மிக்ஸர் வரை பெண்களை வளைத்துப் போட நிறைய கடைகள்; பூஜை புனஸ்கார பிரசாத வகைகளுக்கு ஸ்பான்சர்கள்! கொலுவைக் காட்டிலும் 'பானர்களின்' டிஸ்ப்ளே அமர்க்களம்.

ஜமாய்த்துத் தான் விட்டார்கள் பச்சன் குடும்பத்தினர்; அவரது அறுபதாவது பிறந்த நாளையொட்டி, பேப்பரில் தனி ஸப்ளிமெண்ட் போடுமளவுக்குக் கொண்டாட்டமென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். காலையில் திருப்பதி தரிசனம்; மதியம் 'To Be or not to Be' என்ற புத்தக வெளியீடு - ஜெயா பச்சன் மெனக்கெட்டு உழைத்து, பிரத்யேகப் புகைப்படங்களை எல்லாம் திரட்டி, பத்திரிகையாளர்களைக் கூட்டி, வியர்வை சிந்தினார். மாலையில் வழக்கம் போல 'க்ளிட்டரட்டி'யும் 'லிட்டரட்டி'யும் நிறைந்த விருந்து. விருந்தில் அஃபிஷியலாக

# ஒரு லட்சம் இன்ஷ்யூரன்ஸ்

ஒரு விஷயத்தை வெளியிட்டிருக்கிறார்கள். அதாவது, கரிஷ்மா கபூர் விரைவிலேயே மிஸஸ் கரிஷ்மா அபிஷேக் பச்சன் ஆகப் போகிறார் என்பது. உண்மையில் அன்றே நிச்சயதார்த்தத்தையும் வைத்துக் கொள்வதாய் இருந்திருக்கிறார்கள். ஆனால் மைத்துனி இல்லாத என்கேஜ்மெண்ட் விழாவா? கரீனா கபூர் வெளிநாடுகளில் ஷூட்டிங் முடித்துத் திரும்பிய பிறகுதான் மோதிர மாற்று வைபவம். அதுவரை காத்திருக்க வேண்டியதுதான்.

காத்திருக்க வேண்டிய நிர்பந்தம் சல்மானுக்கும் தான் அக்.21ம்

**மும்பை மசாலா**

• அபிஷேக், கரிஷ்மா

தேதிவரை! ஆர்தர் ரோட் ஜெயிலில் போரடித்துவிட்டதென்று தானா சென்ட்ரல் ஜெயிலுக்கு மாற்றியிருக்கிறார்கள். இவருக்கு எதிர்ப்பு ஒரு புறமிருக்க, இதுவரை விளம்பரப்படுத்தப்படாத மறு பக்கத்தை வெளிச்சமிட்டு ஆதரவு திரட்ட முயல்கிறார்கள் சல்மான் அனுதாபிகள். குடும்பத்தோடு சல்மான், கடைசி கட்டத்திலிருக்கும் கான்சர் நோயாளிகளைப் பார்வையிட்டு ஆறுதல் சொன்னதுடன், பதிமூன்று லட்சங்களை நன்கொடையாக அளித்திருக்கிறாராம்.



• சல்மான்

ஒரு முறை 'Make a wish' ஃபவுண்டேஷனைச் சார்ந்த மாணவி ஒருத்திக்கு சீரியசாகி, கடைசி ஆசை போல, சல்மானுடன் பேச வேண்டும் என்று விருப்பம் தெரிவித்தாளாம். சல்மான் அப்போது ஊரில் இல்லையாம். ஆனால் செய்தி கிடைத்ததும், நாற்பது நிமிடங்களுக்கு ஹைதராபாத்திலிருந்து அந்த மாணவியுடன் அளவளாவிக் கொண்டிருந்தாராம். எய்ட்ஸ் நோயாளிகளைக் கொண்ட கேந்திரம் ஒன்றிற்கு இவர் அடிக்கடிச் சென்று, குழந்தைகளை எல்லாம், டாக்டர்கள் தடுக்கத் தடுக்க, தன் மடிமீது வைத்துக் கொஞ்சி விளையாடுவாராம். ஹூம்.. பொன் போன்ற பக்கம் ஒன்றிருக்க, புண் போன்ற பக்கம் ஒன்றும் இருக்கிறதே? குழப்பம் தான்.. மனசைத் தொட்டு விட்டாரா? தட்டிவிட்டாரா?

தட்டிவிட்டார் தன்னை என்று, தட்டியவர் கையைக் கட்டி பல்லைத் தட்டிவிட்டாரே எங்கள் வீராங்கனை மிஸ் ஸ்ரீவத்ஸவ்? வக்கீலுக்குப் படித்த இந்த இருபத்தைந்து வயது மங்கையை, பஸ்ஸிலிருந்து இறங்கியவுடன் யாரோ தகாத இடத்தில் தட்டி இருக்கிறான். சும்மாவிடாமல், அவனைத் துரத்தி, ட்ராஃபிக் கான்ஸ்டபிள் ஸோனாவானா உதவியுடன் பிடித்து, போலீஸ் ஸ்டேஷனில் ஒப்படைத்து, முட்டிக்கு முட்டி தட்டியும் விட்டார். இத்தனைக்கும் அந்த நபர் படித்து பெரிய கம்பெனியில் பணி புரிபவராம். சீச்சி.. பெயர் 'இல்' எல்லாம் இல்லை!

— ஜெய்ஸ்ரீ ராஜ்

சென்னை மாநகராட்சியின் ஐம்பத்தெட்டாவது வட்ட உறுப்பினர் மங்கை இரகுபதி! மாநகராட்சி சுகாதார நிலைக் குழுவின் தலைவர். இப்போது மாநகராட்சி வட்டாரத்தில் பரபரப்பாகப் பேசப்படுகிறார், இந்த ஆளும் கட்சி உறுப்பினர்.

"நூற்றி ஐம்பத்தைந்து சுகாதார ஆய்வாளர்கள் தனக்கு மாதம் ஐந்நூறு ரூபாய் 'கட்டிங்' வெட்ட வேண்டுமென்று அடம் பிடிக்கிறாராம். யாராவது 'முடியாது' என்று மறுத்தால் பொய்ப் புகாரின் பேரில் அந்த நபரை இடைநீக்கம் செய்து விடுகிறாராம். இப்படித்தான் எண்பத்து நான்காவது வட்ட ஆய்வாளரைச் சமீபத்தில் இடைநீக்கம் செய்து விட்டாராம். அவரது வட்டத்தில் யாராவது வீடு கட்ட, மனை பூஜை போட்டாலோ அல்லது திருத்தி அமைக்க முனையும்போதோ உடனே அங்கே ஆஜர் ஆகி வசூல் வேட்டையில் இறங்கி விடுகிறாராம். பக்கத்து வீட்டுக்காரர் மற்ற எல்லா வீடுகளையும் போல் வாசல் படிக்கட்டுகளை அமைத்தபோது 'ஆக்ரமிப்பு' என்று இடித்துத்தள்ள ஏற்பாடு செய்தாராம். காரணம் 'வெட்டாதது'தானாம். ஆனால் இவர் மட்டும் வீட்டை ஒட்டி, தெருவை ஆக்ரமித்து பத்துக்கு ஐந்து என்ற அளவில் ஓலைக்கீத்து கூரைப் போட்டிருக்கிறாராம். இதற்கெல்லாம் உச்சகட்டமாக சில சுகாதார ஆய்வாளர்களிடம் அவர்கள் விரும்புகிற வட்டத்திற்கு மாற்றல் வாங்கித் தருகிறேன் என்று தலா இருபத்தைந்தாயிரம் ரூபாய் வாங்கினாராம்"

- இப்படி எக்கச்சக்கமான புகார்கள். "அந்தம்மாவைப் பொறுத்தவரை 'காசேதான் கடவுளடா'" என்கிறார் மாநகராட்சி அலுவலர் ஒருவர். "இங்கு நடப்பது கூட்டுக் கொள்ளை, அந்தப் பெண்மணியைப் பற்றி மட்டும் புகார் சொல்வது அர்த்தமற்றது" என்கிறார் ஒரு மாற்றுக்கட்சி கவுன்ஸிலர்.

மங்கையைச் சந்தித்து, இதெல்லாம் நிஜம்தானா? என்று புகார்ப் பட்டியலை வாசித்தோம். இனி அவரது வார்த்தைகளிலேயே...

"ஐய்யய்யோ... யார் சொன்னாங்க...? கைக்காசு செலவழித்துப் பாலிடிக்ஸ் பண்ணறேன்... ஏழு லட்சம் ரூபாய் வீட்டை விற்க வேண்டியதாயிடுச்சு. இப்ப பாருங்க... எங்க வீட்டுக்காரர் பி.எஃப். லோன் போட்டு, அதில்தான் கட்சிக் கூட்டம் நடத்தறேன். (அது பற்றிய பேப்பர்களைக் காட்டுகிறார்) யாராவது வீடு கட்டினா, 'ஐம்பது புடைவை

# "அம்மாவுக்கு மட்டும்தான்

வாங்கிக் கொடுங்க... ஏழைகளுக்குக் கொடுக்கணும்னு கேட்பேன்... அவ்வளவுதான். மற்றபடி யாரிடமாவது காசு வாங்கியதா சொல்லச் சொல்லுங்க... பார்ப்போம்... எனக்கென்ன வருமானம் இருக்கு? கவுன்ஸிலர்களுக்குச் சம்பளம் கிடையாது. ஒரு மன்றக்கூட்டத்திற்குச் சென்று வந்தால் ஐந்நூறு ரூபாய் கொடுப்பாங்க. அவ்வளவுதான். அலுவலகம் கிடையாது. எனவே மக்களுக்காகத்தான் வீட்டு வாசலில் கொட்டாய் இறக்கியிருக்கேன்.

"மாநகராட்சியின் வருவாய் இழப்பிற்குக் காரணம் சுகாதார ஆய்வாளர்கள்தான். லைசென்ஸ் இல்லாமல் நடக்கும், பெட்டிக்கடைகள், டீக் கடைகள், ஓட்டல்கள் ஆகியவற்றில் மாமூல் வாங்கி விட்டு, கண்டு

கொள்ளாமல் இருந்து விடுகிறார்கள். நான் இப்போது மண்டலம், மண்டலமாகக் கூட்டம் போட்டு மாநகராட்சி வருவாயைப் பெருக்கியே ஆக வேண்டும் என்ற டார்கெட் போட்டு 'டைட்' ஆக்கிட்டேன். அதனால் பலருக்கு எரிச்சல். மாநகராட்சிக் குப்பை லாரிகளைப் பழுது பார்ப்பதில் லட்சக்கணக்கில் ஊழல். அது பற்றி அறிக்கை கொடுத்திருக்கிறேன். சுகாதார ஆய்வாளர்களை மாற்றிப் போட்டு நிர்வாகத்தைச் சுறுசுறுப்பாக்கணும் என்று ஆணையரிடம் சொல்லியிருக்கிறேன். எங்க நிலைக்குழு உறுப்பினர்களில் சிலர் சுகாதார அதிகாரியிடம் மாதம் இவ்வளவு கொடுக்க வேண்டும்" என்று கேட்டிருப்பார்கள் போலிருக்கிறது. ஒருவேளை அதிகாரிகள் மட்டத்தில் இந்த வசூல் வேட்டை நடக்கிறதோ என்னவோ... நீங்கதான் ஆராயணும்.

"என்னோட வட்டத்தில் பெரும் பகுதி ரயில்வே குவார்ட்டர்ஸ் மற்றும் குடிசை மாற்று வாரியம் தான். மெட்ரோ தண்ணீர் வராத தெருக்களில் நானே முன்னின்று தண்ணீர் வரும்படி குழாய்களை மாற்றிப் போட்டேன். யாரிடமும் ஒரு சல்லிக்காசு வாங்கவில்லை. நான் நிலைக்குழுத் தலைவராக இருப்பதால் மாநகராட்சி ஊழியர்கள் உட்பட பலர் என்னிடம் 'ஏதோ' எதிர்பார்க்கிறார்கள். நான் எங்கே போவேன்? இனிமேதான் வருமானத்துக்கு வழி பார்க்கணும். கைக்காசு எத்தனை செலவழிக்க முடியும்? இதப் பாத்தீங்களா? (வீட்டில் உள்ள பாத்ரூமைக் காட்டுகிறார்) பக்கத்து வீட்டுக்காரன் இதை ஒட்டி ஜன்னலை போட்டிருக்கிறான். ஒரு ஆளும் கட்சி உறுப்பினர் நான்... இதை என்னால் தடுக்க முடியல! கட்சியிலும் சரி, மாநகராட்சியிலும் சரி... அம்மா எனக்குக் கொடுத்திருக்கிற பதவிகளைப் பார்த்துப் பொறாமைப் படும் சிலர் என்னைப் பற்றிக் கிளப்பி விடுகிற வதந்திகள் இவை. ஆனா இதுக்கெல்லாம் பயப்பட மாட்டேன். அம்மாவுக்கு மட்டும் தான் பயப்படுவேன்" - இவ்வாறு கண்கள் கலங்க படபடத்தார் மங்கை.

...பயப்படுவேன்!"

**மா**நகராட்சியில் சமீபத்தில் நடந்த ரகளையில் தி.மு.க உறுப்பினர்கள் மீது செருப்பைக் கழற்றி வீசியெறிந்ததை மட்டும் மங்கை ஒப்புக் கொள்கிறார். "ரொம்ப பொறுமையாகத் தான் இருந்தேங்க... ஆனால் அம்மாவைப் பற்றி மோசமா பேசினாங்க. தாங்க முடியலை. அதுதாங்க கோபத்தில் அப்படிச் செய்தேன்" என்கிறார்!

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்

படம் : ராஜன்

முரளி என்ற நாற்பத்தைந்து வயது நிர்வாக அதிகாரி என்னைப் பார்க்க வந்தார். மிகவும் மனம் தளர்ந்த நிலையில் காணப்பட்ட அவரது கையில் ஒரு பெரிய ஃபைல்.

"டாக்டர் எனக்கு எப்போதும் அசதியாக இருக்கிறது. கை, கால் வலி தாங்கவில்லை. எந்தச் செயலையும் முறையாகச் செய்ய முடியாமல் ஏதோ படபடப்பு. பயம். சில நேரங்களில் பசிக்கிறது. சில நேரங்களில் பசியே இல்லை." என்று ஏகப்பட்ட பிரச்னைகள் சொன்னார்.

அவர் கையிலிருந்த ஃபைலைப் பிரித்துப் பார்த்தேன். இரத்த அழுத்தம், சர்க்கரை அளவு போன்ற பரிசோதனைகளில் 'நார்மல்' என்றிருந்தன. நிறைய மருத்துவர்கள், ஸ்பெஷலிஸ்ட்டுகள், தெரபிஸ்ட்டுகளைச் சந்தித்து விட்டே என்னிடம் வந்திருக்கிறார் எனவும் தெரிந்து கொண்டேன்.

"சரி.. எங்கே வேலை செய்யறீங்க? எப்ப சாப்பிடுவீங்க? எப்ப தூங்கப் போவீங்க?" போன்ற கேள்விகளைக் கேட்டபோது அவர் தந்த பதில், நம்மில் பலருடைய வாழ்க்கை முறையை ஒத்துப் போவதாகத்தான் இருந்தது.

"ஆபீஸ் முடிஞ்சு வர்றதுக்கே ராத்திரி எட்டு மணி ஆயிடும். அப்புறம் சாப்பிட்டுட்டு, டீ.வி. பார்ப்பேன். படுத்தா, தூக்கம் வர்றதில்லைங்கிறதனாலே, நள்ளிரவு வரை டீ.வி. தான் கதி. காலையிலே ஏழரை மணிக்கு விழிப்பு வரும். குளிச்சிட்டு, ஆபீஸ் கிளம்பிடுவேன்." என்றார். ஏற்கெனவே முரளி, வாதபித்த பிரக்ருதி. இதுபோன்ற ஒழுங்கற்ற வாழ்க்கை முறை அமைந்ததால், முறையற்ற வாதமும், பித்தமும் கூடி, ஸ்ட்ரெஸ், ஏற்பட்டு விட்டது.

"மிஸ்டர் முரளி. உங்களைப் பொறுத்தவரை, உடம்பில் ஒரு பிரச்னையும் இல்லை. உங்களுடைய மன அழுத்தத்துக்குக் காரணம், ஒழுங்கற்ற வாழ்க்கை முறை. அதை மாற்றியமைத்துக் கொண்டாலே, மருந்து எதுவும் இல்லாமலேயே உடல் நலம் தேறிவிடும்" என்றேன்.

நல்ல உணவுப் பழக்கம், முறையான உடற்பயிற்சி, இரவு கண் விழிக்காது இருத்தல், ஒரு குறிப்பிட்ட நேரத்துக்குள் தூங்கப் போகுதல், மிதமான ஓய்வு, உண்ணும் உணவை நன்றாக மென்று சாப்பிடுதல், தியானம் போன்ற கிரமங்களைச் சொல்லிக் கொடுத்து, அவரை அதன்படியே செய்யச் சொல்லி அறிவுறுத்தினேன்.

முதல் வாரம் கொஞ்சம் சிரமப்பட்ட அவர், விடா முயற்சியினாலும், நான் தந்த ஊக்கத்தினாலும் ஆறே மாதங்களில் நல்ல உடல் நலம் அடைந்துவிட்டார். படபடப்பு கைகால் வலி குணமாகிவிட்டது. முரளிக்குச் சொல்லிக் கொடுத்த 'தினசரியை' பற்றி நீங்களும் தெரிந்து கொள்ள வேண்டாமா?

# தினசரியை

'தினசரியை'ன்னா என்ன? ஒரு மனிதன் ஆரோக்கியத்தைப் பேணிக் காப்பதற்கும், நோய் வராமல் தடுப்பதற்கும் தினசரி வாழ்க்கையில் என்னென்ன செய்ய வேண்டும் என்பதற்கான விதிமுறைகள். Daily Routine - அதாவது அன்றாட வாழ்வில் உள்ள ஒழுக்கங்கள்.

'பிரம்மே முகூர்த்தே உத்திஷ்டே...' எல்லாரும் பிரம்ம முகூர்த்தத்திலே எழுந்திருக்கணும். அதாவது மாலை ஆறு மணியிலிருந்து மறுநாள் காலை ஆறு மணி வரை, 'இரவுப் பொழுது' என எடுத்துக் கொண்டால், விடியற்காலை 3 முதல் 5 மணி வரை உள்ளதை, பிரம்ம முகூர்த்தம் என்று சொல்வோம். 3லிருந்து 5 வரை ரொம்ப முக்கியம். அந்த நேரத்தில் எழுந்து

# தேவ மருந்து – 13




## டாக்டர் எல்.மகாதேவன்

கொள்வதை வழக்கமாகக் கொள்ள வேண்டும். இரவு சீக்கிரம் உறங்க வேண்டும்.

பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்து, முதலில் பல் தேய்க்க வேண்டும். அந்தக் காலத்துலே டூத் பிரஷ், டூத் பேஸ்ட் எல்லாம் கிடையாது. மூலிகைக் குச்சிகள்தாம். 'ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி'ன்னு சொல்றாங்களே. ஆல்னா ஆலங்குச்சி. 'வேல்'னா கருவேலம் பட்டை. துவர்ப்பாகவும் கசப்பாகவும் உள்ள வேர்களை, மூலிகைக் குச்சிகளை உடைத்து, நுனியை இலேசாகச் சிதைத்து, பிரஷ்மாதிரி செய்து, பல் தேய்ப்பார்கள். 'பல் தேய்க்கணும்' என்பது நவீனப் பழக்கம் அல்ல. 'தந்த தாவனம்' என்பது அன்றிலிருந்தே கடை பிடிக்கப்பட்டு வருவதுதான். எருக்கு, ஆல், புங்கை, மருதை, கருங்காலி போன்ற மூலிகைச் செடிகளை பல் தேய்ப்பதற்காகப் பயன்படுத்துவார்கள். யார் யாரெல்லாம் பல் தேய்க்கணும், யாரெல்லாம் தேய்க்கக்கூடாது, சில நோய்களுக்குப் பல் தேய்க்கக் கூடாதுன்னு எல்லாம் ஆயுர்வேத சாஸ்திரம் தெளிவாகச் சொல்லியிருக்கிறது.

பல், ஈறுகளைச் சுத்தமாகத் தேய்த்ததும், 'வியாயாமம்' செய்யணும். அதாவது உடற்பயிற்சி. உங்களுடைய உடல் கூறு எதுவாக இருந்தாலும், வாதமாக இருந்தாலும், பித்தமாக இருந்தாலும், கபமாக இருந்தாலும், உடற்பயிற்சி கண்டிப்பாகச் செய்யணும். வாதத் தன்மை அதிகமாக உள்ளவர்கள் யோகா, ரிலாக்ஸேஷன் டெக்னிக்ஸ் செய்யணும். கபம், பித்தத் தன்மை அதிகமாக உள்ளவர்கள் கொஞ்சம் கனமாக உள்ள உடற்பயிற்சிகள், பளு தூக்குதல், ஜிம் அதெல்லாம் செய்யலாம். இடுப்பு வலி, கழுத்து வலி உள்ளவர்கள் எல்லா யோகாவையும் செய்யக் கூடாது. மருத்துவரை ஆலோசித்த பிறகே செய்ய வேண்டும்.

'**வி**யாயாமம்' என்பது முப்பது நிமிட சுறுசுறுப்பான நடை, அதுவும் வாரத்துக்கு ஐந்தே நாள் செய்தால் போதுமானது. கையை வீசிக்கிட்டு, பிரிஸ்கா நடக்கணும். இந்த நடைப்பயிற்சியினால், மிகுந்த பலனுண்டு. சரீரம் லாவகமாகும், லகுவாகும். உடம்பு நல்ல அமைப்புலே இருக்கும். கொழுப்பு குறையும். பசி எடுக்கும். உடம்பின் எல்லாப் பாகங்களும் சுறுசுறுப்பாக இயங்கும். வேலை செய்ய எளிதாக இருக்கும். இருதயம் நல்ல முறையில் இயங்கும். உடலுக்கும் மனசுக்கும் ரிலாக்ஸேஷன் கிடைக்கும். ஆனால் சிலர் அதிகமாக வியாயாமம் செய்யக் கூடாது. ரொம்ப வாதத்தினாலே பாதிக்கப்பட்டவர்கள், அஜீரணன், ரொம்ப வயசானவங்க எல்லாம் வியாயாமம் பார்த்துதான் செய்யணும். பலசாலியா இருந்தால்கூட, உடற்பயிற்சி செய்யும்போது, தன்னுடைய சக்தியில் அரைப் பகுதி, முக்கால் பகுதிதான் உடற்பயிற்சிக்கு விரயம் செய்ய வேண்டும். அதற்குமேலே செய்யக்கூடாது. குளிர்காலத்திலே, உடற்பயிற்சிகளைக் கொஞ்சம் கூடுதலாகவும், வெயில் காலத்திலே மிதமாகவும் செய்ய வேண்டும். உடம்பு நன்றாக வியர்த்ததும், இலேசாகப் பிடித்துவிட வேண்டும் என்றும் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது.

**மேஷம் :** உத்தியோகத்தில் மேன்மை ஏற்படும் வாரம் இது என்பதால், கடினமான வேலைகளையும் திறம்படச் செய்து, அதிகாரிகளிடம் பாராட்டு, பதவி உயர்வு போன்றவற்றைப் பெறுவீர்கள். பணம், காசு சகஜமாகப் புரளும் என்பதால், ஷாப்பிங், பொன், வெள்ளி ஆபரணச் சேர்க்கை என, பெண்கள் உல்லாசமாக இருப்பார்கள். கடன் தொல்லைகள் படிப்படியாகக் குறையும். குரு பார்வை அமோகமாக இருப்பதால், திருமணம் போன்ற சுபகாரியங்கள் நடக்கும். பயணத்தால் அனுகூலமுண்டு. பிள்ளையார்பட்டி பிள்ளையாரை மனதாரத் துதிக்கவும். சகல நன்மைகளும் உண்டாகும்.

**ரிஷபம் :** குருபகவான், பரம திவ்யமாக, 7ம் இடத்தைப் பார்க்கிறார். இதனால் மங்களம் பொங்கிடும் வாரமாக அமைகிறது. இதுவரை தாமதமாகி வந்த, நல்ல காரியங்கள் யாவும் கைகூடும். மக்கள் நலம் சீராக அமையும். கணவன் - மனைவி ஒற்றுமை சிறந்து விளங்கும். தெய்வ அனுக்கிரகம் சிறப்பாக அமைந்திருப்பதால் புண்ணிய ஸ்தல யாத்திரை, குல தெய்வப் பிரார்த்தனை ஆகிய பலன்கள் உண்டாகும். பூர்வீக சொத்து விவகாரம் அனுகூலமாகும். திருத்தணி முருகன் அருள் வேண்டிப் பெறுங்கள். வேலும் மயிலும் துணை.

**மிதுனம் :** பூர்வ புண்ணிய ஸ்தானத்தில் ஆட்சியாக சுக்ரன் சூரியனுடன் உலவுவதால், மறைமுக நேர்முக எதிர்ப்புகள் மறையும். மதிப்பு, கௌரவம் உயரும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி ஏற்படும். பண நடமாட்டம் தாராளமாக இருக்கும். தனியார் நிறுவன நிர்வாகத்தில் சகல காரியங்களிலும் சுதந்திரமாகச் செயல்படும் சூழ்நிலை உண்டாகும். புதிய முயற்சிகள், பதவி உயர்வு, இடமாற்றம் ஏற்படும். முக்கியஸ்தர்கள் தொடர்பு நன்மை தரும். வியாபாரிகள் வளர்ச்சி காண்பார்கள். வாகன யோகமிக்க காலம் என்பதால், புதிய வண்டி, வாகனம் வாங்குபவர்கள் இப்போது வாங்கலாம்.

**கடகம் :** நீங்கள் கலைத்துறையைச் சேர்ந்தவரா? சட்டம், இராணுவம், காவல், தகவல் தொழில்நுட்பம் போன்ற துறையைச் சேர்ந்தவரா? 'ஆம்' எனில் இந்த வாரம் அதிர்ஷ்டமான வாரமாக அமையப் போகிறது என மகிழ்ச்சி கொள்ளுங்கள். பெயர், புகழ் கூடும். கல்லா கணிசமாக நிரம்பும். வியாபாரிகள் மேற்கொள்ளும் பயணம் நல்ல அனுகூலம் தரும். உடன் பிறந்தவர்கள் மூலம் சிறந்த உதவிகள் பெறுவீர்கள். பெண்கள் எண்ணம் நிறைவேறும்.

**சிம்மம் :** புதிய முயற்சிகள் அனுகூலமாகும் வாரமாக இருக்கிறது

# நடக்குமென்பார்;

அதனால் இடையூறுகள் வருமோ, ஆபத்து வந்திடுமோ என்றெல்லாம் கவலைப்பட்டுக் கொண்டிருக்காமல், துணிவுடன் காரியத்தில் இறங்குங்கள். ஆறாம் இடத்தை, உச்சம் பெற்ற குரு பார்ப்பதால், எந்தவித இடையூறும் ஏற்படாது. காரியங்கள் திட்டமிட்டபடி நடக்கும். ஹோட்டல், உணவு, புத்தகம், பத்திரிகை ஆகிய இனங்கள் அனுகூலம் ஆதாயம் தரும். குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். கணவன் - மனைவி இடையே பரஸ்பரம் அன்பு நிலவும்.

**கன்னி :** உங்கள் மதிப்பு, செல்வாக்கு, அந்தஸ்து உயரும். எதிர்பார்த்திருந்த உயர் பதவி இப்போது கிடைக்கும். கொடுக்கல் - வாங்கல் வகையில் சுமூகமான நிலை ஏற்படும். பண நடமாட்டம் தாராளமாக இருக்கும். பழைய கடன் பாக்கிகள் படிப்படியாக வசூலாகும். பொன், பொருள்,

ஆடை, ஆபரணம், அலங்காரம், கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் பொருட்கள் எதிர்பாராத ஆதாயம் கொண்டு வரும். கணவன் - மனைவி உறவு நிலை பாலும் தேனும் கலந்தது போல இனிக்கும். உடன் பிறந்தவர்களால் பிரச்னைகள் ஏற்பட்டு விலகும்.

**துலாம்** : சுக்ரன் ராசியிலிருப்பதால், எந்தக் கெடுதலும் ஏற்படாது என உறுதியே அளிக்கலாம். புதிய உத்யோக முயற்சி, தொழில் முயற்சி, பயண ஏற்பாடுகள் என எல்லாமே ஆதாயம் கொண்டு வரும். ரசாயனம், மருத்துவம், புத்தகம், பத்திரிகை ஆகிய இனங்கள் லாபம் கொண்டு வரும். விற்பனையாளர்கள், தரகர்கள், கமிஷன் ஏஜெண்டுகள் வளர்ச்சி பெறுவார்கள். குடும்பத்தில் கணவன்-மனைவி இடையே சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டாலும், குரு 2ம் இடத்தைப் பார்ப்பதால், உடனுக்குடன் நிவர்த்தியாகிவிடும்.

**விருச்சிகம்** : எண்ணியதெல்லாம் ஏற்றமுடன் நிகழ்ந்திடும் வாரமாக அமைந்திருக்கிறது. மனத்தில் அளவற்ற நம்பிக்கையும் அசாத்தியத் துணிச்சலும் உண்டாகும். தொழிலாளி, முதலாளி உறவு நிலை சுமூகமாக இருக்கும். உத்தியோகத்தில் போட்டி நிலவும் சூழ்நிலையில், கடினமான வேலைகளையும் சுளுவாக முடித்து, பாராட்டு பெறுவீர்கள். பாக்கியஸ்தானத்தில் 'குரு' இருப்பதால், வர வேண்டிய பாக்கிப் பணம் வந்து சேரும். பழைய கடன்கள் வசூலாகும். கூட்டுத் தொழில் புரிபவர்கள் லாபம் பெறுவார்கள். ஏற்றுமதி - இறக்குமதி வியாபாரம் அனுகூலமான பலன் தரும். குல தெய்வப் பிரார்த்தனை மன அமைதி தரும்.

விருச்சிக ராசிக்காரரான பிலிம் நியூஸ் ஆனந்தனுக்கு, வர வேண்டிய பாக்கி தொகை வந்து சேருமாம்.



# நடக்கும்!

**தனுசு** : 12ல் கேது, 6ல் ராகு உலவுவதால், மலை போல வந்த பிரச்னைகளும், பனி போல மறைந்து விடும். போட்டு வைத்த திட்டங்கள் அனைத்தும் மிகக் கச்சிதமாய் நிறைவேறும். உடல் ஆரோக்கியம் மேன்மை தரும். 10ம் இடத்தில், புதன், செவ்வாய் என்பதால், உத்தியோக விஷயத்தில் நல்ல திருப்பம் ஏற்படும். புதிய பொறுப்பு, சுதந்திரமாகச் செயல்படும் நிலை, பதவி உயர்வு, ஊதிய உயர்வு, விரும்பிய இடத்துக்கு இடமாற்றம் ஆகியவை உண்டாகும். மாணவர்கள் முன்னேற்றம் காண்பார்கள்.

**மகரம்** : கையிலே காலணா இல்லாமல், தவித்த காலமெல்லாம் இனி உங்களுக்கு வராது. நல்ல பொருளாதார அபிவிருத்தி அடையப் போறீங்க. உழைப்புக்கேற்ற பலன், திறமைக்கேற்ற பாராட்டு கிடைத்து முன்னணிக்கு உயருவீர்கள். தொழில் காரணமாக வெளிநாடு போக நேரிடலாம். பதவி உயர்வு, இடமாற்றம் வெற்றியே தரும். ஜவுளி, ஆடை, நூல் வகையறா, எதிர்பாராத லாபம் கொண்டு வரும். குடும்பத்தில் ஒற்றுமையும் மகிழ்ச்சியும் நிறைந்திருக்கும். மாணவர்கள் வெற்றி நடை போடுவார்கள்.

**கும்பம்** : தன் வீடான மீனத்தை, குடும்பஸ்தானத்தை குரு பார்ப்பதால், சுப காரியத்தில் ஈடுபாடு, திருமண முயற்சி போன்றவை உண்டாகும். நீண்ட நாட்களாக இழுத்தடித்த சொத்து விவகாரங்களில் அனுகூலமான திருப்பம் உண்டாகும். கலைத்துறை, சங்கீதம், நாடகம், நாட்டியம் ஆகியவற்றில் மாமூல் பலன்கள் தடைபடாது. பெண்களுக்கு ஆரோக்கிய மேன்மை, சரளமான பண வசதி, புதிய பொருள் சேர்க்கை உண்டாகும். இயந்திரம் சம்பந்தமான தொழில்கள் சிறப்புறும். உத்தியோக விஷயத்தில் சிறு சிறு உபத்திரவங்கள் இருந்தாலும், தெய்வ பலத்தால் அனைத்தையும் சமாளித்து மேன்மை அடைவீர்கள்.

**மீனம்** : உத்தியோக விஷயத்தில் 7ல் ஆட்சி

## அக்னிசர்மா பக்கம்

## அக்டோபர் 23 முதல் 29 வரை

உச்சம் பெற்ற புதனுடன் செவ்வாய் கூடியிருப்பதால், புதிய திருப்பம் ஏற்படும். உயர் அதிகாரிகள் மற்றும் ஊழியர்களிடையே சுமூகமான உறவு நிலை இருக்கும். சுய தொழிலதிபர்கள் சுபிட்சம் காண்பார்கள். புதிய பொருள் சேர்க்கை, புதிய வாகன பாக்கியம் ஏற்படும். குரு பலம் பூரணமாக இருப்பதால், பொன், பொருள், ஆடை ஆபரண சேர்க்கை நிகழும். மக்கள் பேறு நண்பர்கள், உறவினர்கள் வருகை, விருந்து, கேளிக்கை உபசாரங்களில் ஈடுபாடு என மகிழ்ச்சிக்குக் குறைவில்லை.

# அழகா? பேரழகா?

பேரழகு என்றால் என்ன என்பதற்கு "முதல் வணக்கத்தில்" மமதி சாரி கூறிய (அல்லது அவருக்கு அப்படி எழுதிக் கொடுத்தவரின்) விளக்கம் கொஞ்சம் வித்தியாசம். "சிலருக்கு அழகாகத் தெரிவது வேறு சிலருக்கு அப்படித் தெரியாமல் போகலாம். எல்லோருக்கும் அழகாகத் தோன்றுவதுதான் பேரழகு" என்றார் அவர். இதைத் தொடர்ந்து டிப்ஸ் கொடுத்தவர் நடிகை லைலா (அவருடையது அழகா? பேரழகா? எனத் தீர்மானிப்பது உங்கள் விருப்பம்).



மறுஒளிபரப்பு என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் பசுமையான பின்னணியில் வயலின்களோடு நடந்து கொண்டே கணேஷ் - குமரேஷும், சிகை சகல திசைகளிலும் ஆடியபடி சிவமணியும், பானையை சுவாரசியமாகப் பதம்பார்த்த விநாயக்ராமும் நடத்திய இசை மேளா ஒரு மாபெரும் அற்புதம். பொதிகைக்காரங்களே, ஒன்ஸ்மோர்.

பொருத்தமான விளம்பரங்களை நிகழ்ச்சிக்கு ஏற்றவாறு தயாரித்தளிக்கும் கலை சமீப காலமாக மிகவும் மெருகேறி வருகிறது. அந்த விதத்தில் "வாழ்க்கையில் ஆக்ஷன் ரீப்ளே கிடையாது. எனவே எங்களை உடனே அணுகுங்கள்" என்று டிடி ஸ்போர்ட்ஸில் கிரிக்கெட் பந்தயங்களுக்கு நடுவே ஒரு வங்கி அளித்த விளம்பரத்தை ரசிக்க முடிகிறது.

இந்தோனேஷியாவில் உள்ள பாலி தீவில் இதுவரை குற்றம் ஏதும் நடந்ததில்லை என்றார்கள். இது கொஞ்சம் ஓவராகத் தெரிந்தாலும் அது ஒரு அமைதியான தீவு என்பதை மறுப்பதற்கில்லை. அங்கு நூற்றுக் கணக்கில் குவிந்த சுற்றுலாப் பயணிகள், தீவிரவாதிகளின் குண்டு வெடிப்பின் காரணமாக இறந்த கோரத்தை பி.பி.சி.யில் காட்டியபோது வேதனையாக இருந்தது. இனி அங்கும் சுற்றுலா தற்காலிகமாக வீழ்ச்சியடையும். வேதனைக்கு காஷ்மீரின் நினைவும் காரணம்.

ஜெயா டிவியின் காலை மலரில் கவிஞர் தாமரையின் பேட்டி. தன்னடக்கம் என்ற போர்வைக்குள் சிக்கிக் கொள்ளாமல் தனது தன்னம்பிக்கையையும், தனது பாடல் வரிகளுக்குக் கிடைத்த வரவேற்பையும் வெளிப்படையாக்கினார். "இஞ்சிருங்கோ" பாடலுக்கான வாய்ப்பு இவருக்குக் கிடைத்ததற்கு முக்கியக் காரணம் இவருக்கு இலங்கைத் தமிழும் தெரியும் என்பது தானாம்.

— சேனல் பாய்.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd.
Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, C.Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Half Yearly Subscription : India : Rs. 165/-
Overseas (Air Mail) Annual : 62 U.S. Dollars, Srilanka Rs.2000/-

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2002 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka

பெண்மையின் **பெருமிதம்**
சென்னை சில்க்ஸ்




பட்டு சேலைகள் | பேன்சி சேலைகள் | சர்ட்டிங்ஸ் | சூட்டிங்ஸ் | ரெடிமேட் ஆடைகள்
டிரஸ் மெட்டீரியல்ஸ் | குழந்தைகளின் ரெடிமேட் ஆடைகள் | ஹேண்ட்லூம் | ஃபர்னிஷிங்ஸ்

Mudra: TCS: 6918: 02 Tam



# தி சென்னை சில்க்ஸ்™
## தமிழகத்தின் மாபெரும் ஜவுளி சாம்ராஜ்யம்

Visit us at: www.thechennaisilks.com

• 23, உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை - 17. ✆ : 4310888 • 74, புது மார்கெட் வீதி, திருப்பூர் - 4. ✆ : 242888
• 558-560, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர் - 1. ✆ : 391555 • 85-A, R.K.V. ரோடு, ஈரோடு - 1. ✆ : 213270